# தொழிலே :: :: நாட்டிற்கு எழில்.

"தொழில் வளர்ச்சிக்கு ஊக்கமளிக்கும் பிரசாரம்"



A
TAMIL TRANSLATION
OF

## PROSPERITY THRO' INDUSTRY

BY

Sir M. Visvesvaraya., K.C.I.E., L.L.D.,

மொழிபெயர்ப்பாளர் :—

எஸ். கிருஷ்ண ராவ், M. A., B. L., உடுமலைப்பேட்டை.

பிரசுரிப்பாளர் :—

டி. எஸ். சங்கரன், B. SC., உடுமலைப்பேட்டை,

With the kind permission of :—
ALL INDIA MANUFACTURERS' ORGANIZATION.
BOMBAY.
1944.

# பொருள் அடக்கம்.

432

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 5 | 28 | பண்டமுற்பத்தி செயல் | பண்டமுற்பத்திசெயல் |
| 22 | 2 | எண்ணையாலும் ஒடும் | எண்ணையாலும் |
| 22 | 18 | Instruements | Instruments |
| 65 | 7 | முடியும், தவிர | முடியும். தவிர, |
| 68 | 20 | இரசானங்கள் | இரசாயனங்கள் |
| 71 | 24 | கட்டிடத்தொழில் | கட்டிடத் தொழில்கள், வீட்டுத் தேவைகள். |
| 74 | 22 | 1235 | 1285 |

# முகவுரை.

ஒரு நாடு செழிப்புற அந்நாடு, பிறநாடுகளை எதிர் பார்க்காமல், தமக்குவேண்டிய எல்லாத் தேவைகளையும் தாமே செய்துகொள்ளவேண்டியது என்பதுதான் அறிஞர்களின் கருத்து. இத்தகைய செழிப்பிற்கு அடிப் படையாக இருப்பது தொழில்களின் சிறப்பே. "உற்பத்தித் தொழிலே உயர்விற்கு உறைவிடம்" என்பதுசரித்திர அநுப வத்தில் அறியப்பட்ட உண்மை. இவ்வுண்மையை அநுச ரித்து நம் நாடும் மேனாடுகள் போன்று மேன்மையை அடை யப்பல பெருந்தொழில்களையும், அவைகளுக்குச் சார்பாகப் பல்லாயிரம் சிறு தொழில்களையும் குடிசைத்தொழில்களை யும் நாகரிக முறையில் செய்ய உடனே ஏற்பாடாக வேண்டும். இவ்விலக்ஷியத்தைக் கொண்டுதான் "அகில இந்திய உற்பத்தியாளர் சங்கம்" ஏற்பட்டுள்ளது. தொழி லறிவு படைத்த பேரறிஞராகிய ஸர். எம். விசுவேசுவரய்யா தான் இதற்கு அடிகோலியாக இருப்பவர். அவருடைய சீரிய தலைமையின்கீழ் இச்சங்கம் நிறுவப்பெற்றுத் தொழில் களின் அவசியத்தை மக்களுக்கு வற்புறுத்தி வருகிறது. இச்சங்கத்தின் அவசியத்தைப் பற்றியும், அதன் நோக்கங் களை மக்களிடத்து எவ்வாறு பரவச்செய்ய வேண்டும் என்ற முறைகளைப்பற்றியும் "Prosperity Through Industry" என்ற தம் நூலில் அன்னார் விரிவாகக் கூறி யுள்ளார். அந்நோக்கங்களை நம் நாட்டில் எல்லாரும் அறியும் வண்ணம் பல மொழிகளில் அந்நூல் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. அகில இந்திய உற்பத்தியாளர் சங்கத்திற்காக அந்நூல் இங்கு தமிழிலும் மொழி பெயர்க் கப்பட்டிருக்கிறது. தமிழ் மக்கள் யாவரும் இந்நூலைப் பரிசீலனை செய்து ஆங்காங்கு தொழிலபிவிருத்திக் கழகங் களை அகில இந்திய உற்பத்தியாளர் சங்கத்தின் சார்பாக

முகவுரை.

ஏற்படுத்தி உற்பத்தித் தொழில்களைப் பெருவாரியாக நிறுவ முன்னணிக்கு வரவேண்டும். அவ்வாறு பல சங்கங்கள் நிறுவப்பெற்று தொழில் வளர்ச்சி ஏற்படச் சாதகமுண்டானல் சங்கத்தின் தலைவரின் இலக்ஷியங்கள் ஒருவாறு கைகூடியனவாக ஆகும். நாட்டுச் செல்வமும் அதனல் பெருகி மக்கள் யாவரும் சுகவாழ்வு பெற முடியும் என்பது திண்ணம்.

உடுமலைப்பேட்டை,
1—10—43.

T. S. சங்கரன், B. Sc.

# முன்னுரை.

(ஸர். எம். விசுவேசுவர அய்யாவால் எழுதப்பட்டது.)

---

இச்சிறு நூல் அகில இந்திய உற்பத்தியாளர் சங்கத்தின் (அ. இ. உ. சங்கம் - All India Manufacturer's Association) காரியக்கமிட்டி அங்கத்தினருடன் கலந்து தயாரிக்கப்பட்டது. நாட்டு மக்களின் செயல்களை ஊதியம் உண்டாக்கும் வகையில் வளர்த்தல், வியாபார வளர்ச்சி, நாகரிகப் பண்டங்களை அதிக அளவில் உண்டாக்கல், இவைகளில் ஊக்கங்கொண்டு முன்னணியில் வரும் மாந்தர்களுக்கு இந்நூல் ஒரு வேண்டுகோளாக அமையப்பெற்றது. உற்பத்தி மிக, பயனும் மிகும். நாட்டு மக்களுக்குத் தமது மேம்பாட்டிலும் செழிப்பிலும் அவாவும் ஊக்கமும் இருக்கும் பக்ஷத்தில் அ. இ. உ. திட்டத்தை அநுசரித்து கிராமம், நகரம், ஜில்லா, மாகாணம், இவைகளில் ஊதியம் தரத்தக்க அபரிமிதமான தொழில்களை முழங்க வைக்கலாம்.

இந்நாட்டில் கோடிக்கணக்கான மக்கள் நித்திய தரித்திரர்களாகவும் மற்றும் அநேகர் மேல்நாடுகளில் ஏழ்மை நிலை (poverty level) என்று கருதக்கூடிய நிலைமைக்கும் கீழ்ப்பட்டும் இருக்கின்றனர். இப்புத்தகத்தைப் படிக்கும் எவரும், இதிலுள்ள புள்ளி விவரங்களைக் கூர்ந்து கவனித்தால், நம் நாடு பொருட்செல்வத்தில் படிப்படியாக குறைந்து வருகிறதென்றும், இவ்வாறு தொழில் வளர்ச்சியில் கவனக்குறைவாக நாம் இருந்துவிட்டால், இப்போது நடக்கும் போருக்குப்பின் இந்நாடு மிகமிகச் சீர்கெட்டு, பலங்குன்றி, ஏழ்மை நிலையையடையக் காரணமாகும் என எளிதில் காணலாம். உலகில் மேன்மையையடைந்த நாடுகள் யாவும் தம் தொழில்

வளர்ச்சியின் உயர்வால்தான் அச்சிறப்பை அடைந்திருக்கின்றன. இயந்திரத் தொழில்களை ஊக்கத்துடன் வளர்த்தால், அது ஒன்றே நாட்டை மேன்மையுறச் செய்து, குறைந்த காலவரையில் மக்களின் செல்வாக்கிற்கும் நிலைமையுயர்விற்கும் காரணமாகும்.

இந்நாட்டில் எம்மாகாணத்தோராயினும் எவராயினும் சரி, மன உறுதி, தேசபக்தி, செயற்திடம் இவற்றுடன், தொழில் வளர்ச்சிக்குச் சாதகமான சங்கங்களை ஆங்காங்கு ஏற்படுத்துவதால், அவர்கள் தங்களுடையவும், தம்மைச் சுற்றியுள்ளவர்களுடையவும், பொதுவாக நாட்டினுடையவும் நலத்தைச் செய்பவர்களாக ஆவர் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. இச்சங்கங்கள், தம்மைச்சுற்றியுள்ள இடங்களின் பொருளாதார சாதனங்களையும், தொழிற் சாதனங்களையும் நன்காராய்ந்து, மக்களின் செல்வாக்குக் குறைவையும், அதற்குக் காரணங்களையும், அக்குறைகளை நீக்கும் முறைகளையும் கண்டு, தொழிலால் பண்டங்களை உண்டாக்கி அவைகளால் ஏற்படும் நாட்டுச் செழிப்பை மாந்தர்களிடம் பரவச்செய்ய வேண்டும்.

இவ்வாறு தொழிலபிவிருத்தி, பண்டமுற்பத்தி, இவைகளில் அவாவுள்ள மக்கள் யாவரும், அ. இ. உ. சங்கத்திலோ அல்லது அதன் சார்பு சங்கங்களிலோ கலந்து கொள்ளுவது நலம். ஏனெனில் இந்நூலில் விவரித்திருக்கிறபடி, மக்களிடத்து செயற்திறனையும், ஊதியம் தரத்தக்க முயற்சிகளையும், பண வருவாயை அதிகமாக்குதலையும், நாட்டுச் செல்வாக்கையும் விரைவாகத் தொழிலபிவிருத்தியால் உண்டாக்குவதே இச்சங்கங்களின் நன்னோக்கமாகும்.

எனவே, தொழிலபிவிருத்தி விஷயத்தில் மக்களிடத்துத் தன்னலமும், பொதுநலமும், ஊக்கமும் அளிப்பதே இந்த

# முன்னுரை.

நூலின் இலக்ஷியம். பொருளாதார விஷய சம்பந்தமான அரசாங்கத் திட்டங்கள் மக்கள் தேவைக்கு அவ்வளவாகப் பயனளிப்பதாக இல்லை. அரசாங்கத்தார் தம் மனப் பான்மையை மாற்றி உண்மையில் உதவ முன்வந்தால் நாம் அவைகளை வரவேற்க வேண்டும். ஆனால் மக்கள் அரசாங்கத்தாரின் உதவியையும் திட்டங்களையும் எதிர் பார்க்காது, கூடிய அளவில் தம்மை மேம்படுத்தும் சந்தர்ப் பங்களைக் கைசோரவிடாது, தம் சொந்த ஹோதாவில் ஒற்றுமையுடன் தொழிலபிவிருத்தி செய்து, பண்டங்களை ஏராளமாக உற்பத்தி செய்து, வியாபாரத்தை வளர்த்து, நாட்டின் செழிப்பு நிலையை உயர்த்தவேண்டும். உகந்த சந்தர்ப்பங்களில் நாம் தொழிலபிவிருத்திக்கான முயற்சி யின்றி வாளாயிருந்தால், அதுவே நாட்டின் நாசத்திற்கு முதற்காரணமாகும் என்பது திண்ணம்.

மற்றும் அ. இ.உ. சங்க நன்னோக்கங்களை அநுசரித்துத் தம்மளவில் தொழிலபிவிருத்திச் சங்கங்களை நிறுவுதலை நாம் வரவேற்கிறோம். ஷை சங்கத்தின் கோட்பாடுகளை நாட் டின் நலத்திற்காக எவ்வாறாயினும் பயன்படுத்த யாவருக் கும் உரிமையுண்டு. ஒற்றுமையான ஊக்கமே ஆக்கத்திற் காதாரம். இது நம் பொது இலக்ஷியத்தை விரைவில் அளிப்பதாகும். எனவே அ. இ. உ. சங்கக் கோட்பாடு களை அநுசரிப்பவர்கள் தமக்குள்ளேற்படும் சின்னஞ்சிறு அபிப்பிராய பேதங்களைப் பொருட்படுத்தாமல் இச்சங்கத் தின் முக்கியமான பரந்த நோக்கத்திற்காக ஒத்துழைப்பார் களாக. நமது இச்சங்கத்தின் இலக்ஷியமாவது :

> " பொருளுடையோர் தத்தமது இடங்களில், தொழிலபிவிருத்தி, பண்டமுற்பத்தி செயல் முதலிய நோக்கத்துடன் சங்கங்களை ஏற்படுத்தி, புத்தகங்கள், விளம்பரங்கள், துண்டுப் பிர சுரங்கள், குறிப்புகள், பிரசங்கங்கள், ஆதிய

முன்னுரை.

பல வகைகளில் பிரசாரம் செய்து, அதனுல் தொழில் வளர்ச்சி நோக்கங்களை மக்களிடத்துப் பரவச்செய்து, அவர்களின் இரத்தத்தில் ஊற வைத்து, நம் நாட்டின் செழுமையையும், செல்வாக்கையும், பொருளாதார நிலையையும் மேம்படச் செய்யுமாறு, பொதுநல ஊக்கங்கொண்ட ஒவ்வொருவரையும் இச்சங்கம் மனப்பூர்வமாக வேண்டிக்கொள்ளுகிறது."

பம்பாய்,
15—9—42.

எம். விச்வேசுவரய்யா.

# தொழிலே நாட்டிற்கு எழில்.

## 1. இந்தியரின் ஏழ்மை: அதற்குக்காரணம்.

இந்தியா ஏழைநாடு. நாம் ஏழைகள். ஏன்? நம் வாழ்வுநிலை மிக்க தாழ்ந்திருப்பதேன்? ஏனெனில், நாட்டில் உற்பத்தி குறைவு; வாழ்க்கையில் பெரும்பாலோர் விவசாயத்தையே நாடுகின்றனர். வருவாயை ஊட்டும் இயந்திரத் தொழிலைப் புறக்கணித்தோம். உற்பத்தித் தொழிலைச் சார்ந்திருக்கும் உபதொழில்களைக் கவனித்தோமல்லோம். ஏன் நாட்டில் உற்பத்தி குறைவு? நமக்கு வேண்டிய அளவு பண்டங்களை நாம் ஏன் இங்கேயே உண்டாக்க முடிகிறதில்லை? காரணம் யாதெனில், நாம் நம் மக்களின் திறமைகளைச் சரிவரப் பண்படுத்தாமலும் ஒழுங்குபடுத்தாமலும் இருக்கிறோம். அரசாங்கமும் நாட்டுப் பொருளீட்டுத் துறைகளைத் திட்டப்படுத்தாமலும், அவைகளைச் சீரிய முறையில் பெருக்காமலும், அப்படி ஏதேனும் செய்தாலும் பெரும்பான்மையாகச் செய்யாமல் சிறிய அளவில் மட்டும் செய்து கொண்டும் வருகிறது. மற்றும், மக்களிடம் கல்விப்பெருக்கில்லாமல் இருப்பதும், விவசாயத்தை மட்டிலும் வாழ்க்கைச் சாதகமாக வைத்துக் கொண்டிருப்பதும், தொழிலபிவிருத்தியில் ஜனங்களின் ஆற்றலை வளர விடாமல் வைத்திருப்பதும், நாட்டின் ஏழ்மைக்கு முக்கிய காரணங்கள்.

2. நம்மிடமிருக்கும் இக்குறைகளை நீக்க, உலகில் ஏழ்மை நிலையிலிருந்து மேன்மையை யடைந்த பல நாடுகளின் போக்கைக் கவனித்து, நம் நாட்டின் போக்குடன் ஒப்பிட்டுப் பரிசீலனை செய்ய வேண்டும். செல்வாக்கான பிறநாட்டாரநுஷ்டிக்கும் பொது நன்மைத் திட்டங்களையும்,

பல துறைப் பெருக்கங்களையும் கவனித்தால் நம் நாட்டிலிருக்கும் பொதுநல இலாகாக்களும் பொருளீட்டுச் செயல்களும் எவ்வளவு பிற்போக்காகவும், கீழ்த்தரமாகவும், சரியான வழியில் செலுத்தப்படாமலும் இருக்கின்றன என்பது வெள்ளிடை மலைபோல் விளங்கும். நம் நாட்டை இப்போது சீர்திருத்த வேண்டுமானால், கல்வி, தொழில், தற்காப்பு ( இராணுவம், கப்பற்படை, ஆகாயப்படை ), பொருளாதாரம், வியாபாரம், போக்கு வரத்து முதலிய அரசாங்க இலாகாக்களை உடனே திருத்தி யமைக்க வேண்டியது அவசியமாகும். இப்போது நடக்கும் போரைப் பொருத்த அளவில் பல விஷயங்கள் உடனே கவனிக்க வேண்டியதாக இருக்கின்றன. ஆனால் அவ்விதம் கவனம் யாராவது செலுத்துகிறார்களா? 'இல்லை' என்று அழுத்தமாகச் சொல்லமுடியும். போர்க் காலத்திலாகட்டும், மற்றும் சமாதானம் நிலவும் சமயத்திலாகட்டும், நாட்டின் செழிப்பை நல்கும் எல்லாவகையான தொழில் முறைகளும், வியாபாரங்களும் வேண்டுமென்றே முன்னேறாமல் தடுக்கப்பட்டு வருகின்றன. மற்றும் சமீப காலத்திற்கு முன் கிழக்கு நாட்டுப் பொருளீட்டுக் கழகம் (Eastern group supply conference) நிறுவியதனின்றும், நம் அரசாங்கத்தார் நாட்டில் போர் சம்பந்தமான பெரும் தொழில்களை ஏற்படுத்தும் விஷயங்களில் எவ்வளவு பராமுகமாய் இருக்கின்றனர் என்று நன்கு புலப்படும்.

3. இப்போது நடப்பது இயந்திர சகாப்தம். இரும்பு யுகம். இயந்திரத் தொழில்களால்தான் ஒரு நாட்டிற்குச் செல்வாக்கும், மேன்மையும் உண்டாகின்றன. இது சரித்திரவாயிலாக அறியப்படும் உண்மை. அமெரிக்கா ஐக்ய நாட்டுச் சரித்திரத்தையும், ஆங்கிலேய ஐக்ய நாட்டுச் சரித்திரத்தையும் கவனியுங்கள். இந்தியாவில் இயந்திரத் தொழில்களைப் பண்படுத்தாமலும், வளர்த்தாமலுமிருப்பதால்தான், நாம் பலதிறப்பட்ட தொழில்களைச் செய்ய வகையின்றி

வருவாயற்று, வறுமை வளர்ந்து, தேசக் காப்பிற்கும் தற்காற்பிற்கும் போதிய பலமற்று, தொழிலபிவிருத்திபெற்ற பிற நாடுகளில் மக்கள் அநுபவிப்பது போன்று மன உற்சாகத்திற்குத் தேவையான நாகரிக வசதியற்று, அடிமைகள் போன்று நாகரிகக் கீழ்ப்படியில் உழலுகின்றோம். இங்கு தரப்படும் சில புள்ளி விவரங்களைக் கவனிக்கவும்.

**I. ஜனத்தொகையும் படித்தவர்கள் சதவீதமும்.**

| தேசம் | ஜனத்தொகை | சதவீதம் |
|---|---|---|
| | கோடி | |
| இந்தியா ... ... | 39 | $9\frac{1}{2}$ |
| இங்கிலாந்து ஐக்யநாடு... | 5 | 76 |
| அமெரிக்கா ஐக்யநாடு ... | 13 | 75 |

இப்புள்ளி விவரத்தினின்று மேற்கு நாடுகளைக் காட்டிலும் நம் நாடு படிப்பில் எவ்வளவு கீழ்த்தரப்பட்டது என்பது விளங்கும். இந்நாட்டில் படிப்புநிலை மேல் நாடுகளுக்கு ஈடாக வர வேண்டுமானால், ஒவ்வொரு கிராமத்திலும் இரஷ்யர்களின் 5-வருடத்திய திட்டத்தைப் போன்று திட்டங்களை ஏற்படுத்தி, பல ஆண்டுகள் அவைகளை அமுலில் வைக்கவேண்டும். அப்பொழுதுதான் இந்தியர் படிப்பில் கீழ்த்தரப்பட்டவர் என்ற அவமானம் நீங்கும். மற்றும்,

**II. தொழில்களில் போடப்பட்டிருக்கும் மூலதனம்.**

| நாடுகள் | மூலதனம் மொத்தம் | நபர் 1-க்கு தொகை |
|---|---|---|
| | கோடி ரூ. | ரூ. |
| இந்தியா ... ... | 750 | 19 |
| இங்கிலாந்து ஐக்யநாடு... | 7067 | 1485 |
| அமெரிக்கா ஐக்யநாடு ... | 23000 | 1765 |

## தொழிலே நாட்டிற்கு எழில்.

இங்கிலாந்து, அமெரிக்கா போன்ற சுய ஆக்ஷி நடை பெறும் நாடுகளில் முன்யோசனையுடன் தொழிலபிவிருத்திக்காக மூலதனம் சேமிக்கப் படுகிறதென்றும், அத்தகைய திட்டங்களுக்கு இந்தியாவில் யாவராலும் யாதொரு கவனமும் செலுத்தப் படுகிறதில்லை யென்றும் மேற்குறிப்பிட்ட புள்ளி விவரங்கள் அறிவிக்கின்றன.

### III. தொழிற் பாகுபாடுகள்.

| நாடுகள் | மொத்த ஜனத்தொகை | சதவீதம் | |
|---|---|---|---|
| | | இயந்திரத் தொழிலில் | விவசாயத்தில் |
| | கோடி | | |
| இந்தியா .... .... | 39 | 10·2 | 67 |
| இங்கிலாந்து ஐக்யநாடு.... | 5 | 47·2 | 8 |
| அமெரிக்கா ஐக்யநாடு .... | 13 | 31·7 | 22 |

இயந்திரத் தொழிலின்மையால் இந்தியாவில் மாந்தர் பெரும்பான்மையோர் அதாவது 67 சதவீதம் (நூற்றுக்கு 67 பேர்) இன்னும் விவசாயத்திலேயே வாழ்க்கையை வைத்துக்கொண்டு கிராமங்களில் பழைமையான முறைகளில் ஈடுபடுவதாகத் தெரிகிறது. இயந்திரத்தொழில், வியாபாரம், இவைகளில் கவனக்குறைவால் இந்நிலை ஏற்படும் எனத்தெற்றென விளங்கும்.

### IV. ஜனத்தொகையில் நபர் ஒருவருக்குச் சராசரி வருட வருமானம்.

| நாடுகள் | இயந்திரத் தொழிலால் | விவசாயத்தில் | மொத்தம். |
|---|---|---|---|
| | ரூ. | ரூ. | ரூ. |
| இந்தியா .... .... | 12 | 48 | 60 |
| இங்கிலாந்து ஐக்யநாடு.... | 463 | 68 | 531 |
| அமெரிக்கா ஐக்யநாடு .... | 830 | 219 | 1049 |

எனவே இந்தியாவில் நபர் ஒன்றுக்கு வருட சராசரி வருமானம் ரூ. 60 தான். மற்றும் சில மாகாணங்களில் விசாரித்ததில் உண்மையில் பலருக்கு வருட சராசரி வருமானம் ரூ. 25-க்குக் கீழாகவே இருக்கிறதென்றும் தெரிகிறது. எனவே நம் நாடு எவ்வளவு எளியநாடு என்று நினைக்க நம் நெஞ்சம் பதறவில்லையா?

4. நம் நாட்டை ஆண்டுவரும் இங்கிலாந்து வெகு காலமாக சுங்கமற்ற (Free-trade) வணிகத்திற்கு இடங் கொடுத்து வந்தது. அக்கொள்கையை நம் நாட்டிலும் உட்புகுத்தியதால், வெளிநாட்டாருடன் விலை வாசிகளில் நாம் போட்டிபோட முடியாமல் நம் நாட்டுக் கைத் தொழில்கள் பல நசித்துப் போயின. ஏனெனில் இங்கு இயந்திர வசதி இல்லை. அயல் நாடுகளில் இயந்திர வசதியால் அளவற்ற பொருட்களைக் குறைவான விலையில் தயாரித்து நம் நாட்டுச் சரக்குடன் போட்டியாக இங்கே அயல் நாட்டு வாணிபம் தழைக்க ஆரம்பித்தது. இதர நாடுகளில் இறக்குமதிப் பண்டங்களின் பேரிலுள்ள சுங்கவரி போன்று போதிய அளவிற்கு இங்கு வரிகள் கிடையாது. ஆதலால் சுதேசிப் பொருள்களுக்குத்தக்க பாதுகாப்பின்றி வியாபார மந்தம், உற்பத்தி மந்தம், தொழில் மந்தம் இவை ஏற்பட்டன. மற்றும் அயல் நாடுகளைப்போன்று உள் நாட்டுத் தொழில்களுக்கு அரசாங்கத்தாரால் தக்க உதவியும், சலுகைகளும் போதிய அளவிற்குக் கிடையாது. மக்களுக்குத் தக்க முறையில் படிப்பும், பயிற்சியும் கொடுக்கப் படுவதில்லை. இக்காரணங்களினால் நாட்டிற்குச் செழிப்பையளிக்கும் இயந்திரத் தொழில்களும், வியாபாரமும், தற்காப்பும் மேம்பாடடைய முடியாமல் போகிறது. முடிவில் நம் நாடு பிறநாட்டு வியாபாரத்திற்கு உட்பட வேண்டியிருக்கிறது.

சாதாரண காலங்களில் பெரும் இயந்திரத் தொழில்களை அபிவிருத்தி செய்திருந்தால் போர் நடக்கும்

இக்காலத்தில் தற்காப்புத் தளவாடங்களையும், இராணுவத் தேவைகளையும் உற்பத்தி செய்ய எளிதாக இருந்திருக்கும். மக்கள் சுயேச்சையாக இருக்கும் அமெரிக்கா, ஜெர்மனி, பிரான்சு ஆதிய நாடுகளில் இவ்வாறுதான் தற்காப்புகள் செய்துகொள்ளப்பட்டன.

பொதுவாக இந்திய அரசாங்கத்தார், நம் தேவைகளுக்கு வேண்டிய இருப்புப்பாதை, இயந்திரங்கள், இராணுவத் தளவாடங்கள் முதலியவைகளை இங்கிலாந்தினின்று தருவித்துக் கொண்டிருக்கின்றனர். சில சந்தர்ப்பங்களில் ஜெர்மனி, அமெரிக்கா, கானடா முதலிய நாடுகளினின்றும் வாங்கியதுண்டு. ஆனல் இந்திய இயந்திரத் தொழிலிற்குத் தம் தேவைகளைச் செய்து கொடுக்கச் சந்தர்ப்பங்கள் கொடுக்கவாவது, உள்நாட்டுத் தொழிற்கல்வி நிலையங்களில் நிபுணர்களைப் பழக்குவதற்காவது இந்திய அரசாங்கம் யாதொரு முயற்சியும் செய்ததாக இதுவரையிலும் கிடையாது.

5. மேல்நாடுகளுக்குச் செல்வத்தையும் மேன்மையையும் அளித்தவை இரும்பு, மோடார்த் தொழில்கள் தான். அந்நாடுகளில் உற்பத்தித் திறனும், வியாபார உயர்வும் நாகரிக மேம்பாடும் இவ்விரண்டு தொழில்களால்தான் ஏற்பட்டன. இந்திய எஃகுத்தொழில் அமெரிக்க நிபுணர்களின் உதவியால் முதலில் ஸ்தாபிக்கப்பட்டது. இப்பொழுது மற்ற நாடுகளைக் காட்டிலும் குறைந்த விலையில் இரும்புப் பாளங்களும் உருக்கும் இங்கேயே செய்யப்படுகின்றன. அமெரிக்கா ஐக்ய நாடுகளில் ஒரு வருஷத்திற்கு 10 கோடி டன் எடையுள்ள உருக்குப் பண்டங்களை உண்டாக்கத் தக்க இயந்திரங்கள் இப்பொழுது இருக்கின்றன. ஆனல் இந்நாட்டில் தற்சமயம் வருஷத்திற்கு 12½ லக்ஷம் டன்களுக்கு அதிகமாக உருக்கு உற்பத்திசெய்ய வசதிகளும் இயந்திரங்களும் கிடையாது. போர் நடக்கும் தற்சமயத்தில்

ஏராளமான வசதிகளை உண்டாக்கிக் கொள்ளலாம். ஆனல் அரசாங்க நோக்கங்கள் பிற்போக்காக இருக்கின்றன. போர் துவக்குதற்கு முன்னிருந்தே நாம் நம் நாட்டிலேயே மோட்டார் வண்டிகளைச் செய்ய ஆயத்தமாக இருந்தும் இந்திய சர்க்கார் அதற்குப் போதிய ஆதரவு அளிக்கவில்லை. இது யாவரும் அறிந்ததே. அத்தொழிலை நாம் ஆரம்பித்திருந்தால் நம் நாட்டிற்கு ஒரு சிறப்பையும் அளித்து இப்போது நடக்கும் போருக்கு வேண்டிய உதவியையும் அளித்து இருக்கும். போர் துவக்கியதினின்றும் நமது அரசாங்கம் வெளி நாடுகளிலிருந்து சுமார் 50 கோடி ரூபாய் பெறுமானமுள்ள மோடார் வண்டிகளை வாங்கியிருப்பதாக நம்பப்படுகிறது. இதனல் நம் இயந்திரத் தொழில் விருத்தியாகாமல் இருந்ததுமன்றி நம் நாட்டுச் செல்வமும் வெளிநாடுகளுக்குப் போய்விட்டது. என்னே நம் துரதிருஷ்டம்! மற்றும், மற்ற நாடுகளைவிடக் குறைந்த செலவில் வேண்டிய அளவிற்கு உருக்குப் பண்டங்கள் தயாரிக்கப் போதிய வசதிகளும் மூலப் பொருள்களுமிருக்க இராணுவத்திற்கான வண்டிகள் அமெரிக்காவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டால் நாம் எவ்வாறு உய்வோம்.

6. நம் நாட்டில் நாளுக்குநாள் ஜனத்தொகை வேகமாகப் பெருகிக் கொண்டே போகிறது. ஆனல் அதற்குத்தக்க தொழிலபிவிருத்தி, வருவாய், வியாபாரம் இவை பெருகவில்லை. நாம் வறுமையை ஒழித்து செழிக்க வேண்டுமானல், தக்க தற்காப்பு வசதி, பொருளாதார வசதி, போக்கு வரவு சாதனங்கள், வற்றுத வாங்கும் திறன், செல்வாக்கு இவைகள் வேண்டுமானல், மற்ற நாட்டினருக்குச் சமமாக நாம் உயர வேண்டுமானல், தேச நன்மைக்குத் தடங்கலான சமூகப் பிற்போக்கு நோக்கங்களை அறவே யொழித்து, முற்போக்கு எண்ணங்களைக்கொண்டு தேச சேவையே கடவுள் பணி என்று நம் கடமையைச் செய்ய நாம் முன்வர வேண்டும்.

## 2. இயந்திரத் தொழில் இன்றியமையாதது.

7. இந்தியா ஒரு பெருங்கண்டம். ஜனத்தொகை மிக்க நாடு. ஏராளமான மூலப்பொருள்களும் வசதிகளும் கொண்டது. ஊக்கமும் ஆக்கமும் படைத்த நாடு. இருப்பினும் இராணுவத் தளவாடங்களையும், இயந்திரங்களையும் வெளி நாடுகளிலிருந்து எதிர்பார்க்க வேண்டியிருக்கிறது. தொழிலபிவிருத்தி யாகாதவரை ஜீவனோபாயத்திற்கு பழைமையான உழவுத் தொழிலையே நம்பவேண்டியிருக்கிறது. இக்காலத்தில் உழவுத் தொழிலை மட்டிலும் நம்பியிருக்கும் எத்தேசமும் தற்காப்பிற்குத் தம் மக்களுக்கு இராணுவ பலத்தையும், உயரிய வாழ்விற்குப் போதிய பண்டங்களையும் கொடுக்க இயலாது என்பதை நாம் மறக்கலாகாது. இந்த உண்மைக்கு இந்தியா ஒரு விலக்காகாது. ஒரு தேசத்தின் செல்வ வளர்ச்சியால்தான் அதன் வாழ்வு நிலை உயரும்.

8. இந்தியாவின் இந்த துக்ககரமான நிலைமைகளை மாற்றியமைக்கக் கீழ்க்குறிப்பிட்டபடி சீர்திருத்தங்கள் தேவையாகுமென ஒவ்வொருவரும் அறிந்ததே :—

(i) படிப்பாலும், தொழிற்பயிற்சியாலும் ஒவ்வொருவரும் தம் தொழிற்திறமையை வளர்த்தல்.

(ii) தேசமக்களின் செல்வாக்கிற்குத் தடையாகவிருக்கும், நாட்டின் பொருளாதார நிலையைக் குறைக்கும் சமூகத்திலுள்ள பழக்க வழக்கங்களை அறவே ஒழித்தல்.

(iii) தேசமக்களின் தொழிலைப்பொறுத்து, விவசாயமும், இயந்திர உற்பத்தித் தொழிலும் ஒன்றற்கொன்றுதவியாகச் சரிகட்டிக்கொள்ளும் வரை, நாட்டிலுள்ள இயற்கை, செயற்கைப்பொருள் சாதனங்களைத் தற்கால இயந்திரத் தொழில்களில் ஈடுபடச் செய்தல்.

9. முதலில், நாட்டுமக்களின் தொழில் வன்மையை மக்கள் வளரச்செய்ய இப்பொழுது இருப்பதைக் காட்டிலும் அதிக கல்வி கற்கவேண்டும். 9-வது பக்கத்தில் கூறியபடி நம் நாட்டில் நூற்றுக்கு $9\frac{1}{2}$-விதம்தான் கல்வியுடையவர்களாக இருக்கின்றனர். அதிலும் சமூக நடவடிக்கைகளில் கலந்துகொள்ளத் தகுந்த படிப்புள்ளவர்களின் எண்ணிக்கை இன்னும் குறைவாகவிருக்கும். எது எவ்வாருயினும் ஒரு நாட்டில் நூற்றுக்கு 70 மனிதர்க்குக் குறைவாகக் கல்வி கற்றவர் இருப்பது கூடாது. கடுதாசியளவில் மாத்திரமில்லாத கட்டாயப் படிப்புத் திட்டத்தாலும், அதைச் சரிவர அமுலுக்குக் கொண்டு வருவதாலுந்தான் படிப்பின் உயர்நிலையை அடைய முடியும். ஆனல் அரசாங்க நிர்வாக இலாகாக்களில் கட்டாயக்கல்வித் திட்டத்தைப்பற்றி யோசிக்காமலுங்கூட இருந்தால் இது எவ்வாறு சித்திக்கும்? கல்வி கற்ருேரின் எண்ணிக்கை அதிகப்படின், அப்பொழுது அவர்களுக்கு தம் நன்மையையும், தேச நன்மையையும், தாமே கவனிக்கும் ஆற்றல் வந்துவிடும். இதனல் அரசாங்கத்தாருக்கும், பொது ஸ்தாபனங்களுக்கும் ஜனங்களின் நன்மைக்காக மேற்கொள்ளும் பொறுப்பு குறையும்.

10. மற்றும், தொழிலில் ஈடுபடுபவர்களின் தொழிற் பயிற்சியும், கல்வியும், நற்குணங்களும் ஒன்றற்கொன்று அநுசரணையாக இருத்தல் வேண்டும். மற்ற தொழிலாளிகளுடன் ஒத்துழைத்தல், மேலதிகாரிகளுக்கும் சட்டத்திற்கும் கீழ்ப்படிதல், தம்மைவிடக் கீழ் நிலையிலுள்ளவர்களிடமிருந்து சரிவர வேலை வாங்குதல் முதலியவைகளை ஒவ்வொரு தொழிலாளியும் கற்றுக் கொள்ளவேண்டும். சமயோசிதயுக்தி, ஆர்வம், நாணயம், சுயநலமின்மை, இவை போன்ற நற்குணங்கள் தொழிற்கல்வி, விசேஷப்பயிற்சி முதலியன போன்று முக்கியமானவை. இவையாவும் தொழில்வளர்ச்சிக்கும், வியாபாரவளர்ச்சிக்கும் அவசியம்.

தொழிலில் ஈடுபட்டவர்கள் யாவரும் தமக்குச் சரியான தொழிற்கல்வி, பயிற்சி முதலியன கொடுக்கப்படவில்லை என அறிய ஆரம்பித்திருக்கின்றனர். தொழிற்கல்வி மிக மிக அவசியம் என்ற உணர்ச்சி இப்பொழுது பொதுவாக ஏற்பட்டிருக்கிறது. இதைப்போல் சரியான "கண்காணிப்பும்" அவசியமாக ஏற்படுகிறது. அதனால் வருவாய் அதிகப்படும். மனோதிடம், பயிற்சி, அநுபவம், தன்னலமின்மை இவைகளால் தான் கண்காணிப்புத்திறன் ஏற்படும். பொதுவாகப் பொருளுள்ளோர்க்குத் தான் தொழிற்பயிற்சி சாத்தியமாகிறது. அமெரிக்கா முதலிய மேனாடுகளில் தொழிலாளர்கள், தம் கல்வித்திறனாலும், தொழிற்பயிற்சியின் சிறப்பினாலும், தேக சிரமத்தைக் கொடுக்காத வன்மைமிக்க விஞ்ஞானக் கருவிகளாலும், அதிக ஊதியத்தைப் பெறக்கூடியவர்களாக ஆகின்றனர். மற்றும் அந்நாடுகளில், கண்காணிப்பு, அடக்கம், வேலைத்திட்டம் முதலியவைகள் விஞ்ஞான ஆராய்ச்சிகளாலும், அநுபவத்தாலும் சீர்ப்படுத்தப்பட்டிருக்கின்றன. இவை தொழிலாளர்களின் வாழ்க்கை நிலையை உயர்த்தவல்லன. நம் நாட்டிலும் இத்தகைய செழிப்பை உண்டாக்க வேண்டுமானால் சரியான திட்டங்களை ஏற்படுத்தி, சாதாரணக் கல்வியையும், தொழிற்பயிற்சியையும் பலபேர்கள் கற்கும்படி செய்து, அதனால் மக்களின் மனோவன்மையையும், செயல் திறனையும் விருத்தியாக்கி நாட்டில் வருவாயையும், கூலி, சம்பளம், பொருளாதார நிலை இவைகளையும் உயர்த்த வேண்டும்.

11. விவசாயத்தையுங்கூட நன்முறையில் விருத்தியாக்க வேண்டும். ஆனால், உழவுத்தொழிலை மட்டிலும் நம்பி வாழும் மக்களின் எண்ணிக்கை குறையும் வரை விவசாயத்தில் அபிவிருத்தி ஏற்படாது. ஏனெனில், நம் நாட்டில் ஏறக்குறைய நூற்றுக்கு 67 பேர் உழவுத்தொழிலை நம்பியிருக்கின்றனர். ஆனால், மேன்மையடைந்த இதர

நாடுகளில் நூற்றுக்கு 33 பேருக்கும் குறைவாகத்தான் விவசாயத்தொழில் செய்கின்றனர்; அதாவது நம் நாட்டிலுள்ள விகிதத்தில் பாதிக்கும் குறைவாகத்தான். இங்கிலாந்தில் நூற்றுக்கு 7 பேரும், அமெரிக்காவில் நூற்றுக்கு 22 பேரும்தான் விவசாயிகள். ஒரு நூற்றுண்டிற்குமுன் அமெரிக்கா இப்பொழுது நாமிருக்கும் நிலையில் இருந்தது. அப்போது அங்கு நூற்றுக்கு 67 பேருக்குமேல் உழவர்களாக இருந்தனர். ஆனால் உழவர்களின் ஜனத்தொகையைக் குறைத்து எஞ்சி நிற்கும் மக்களை உற்பத்தித் தொழில்களில் ஈடுபடச்செய்வித்த பிறகுதான் அத்தேசங்கள் இப்போது அடைந்திருக்கும் மகோன்னத நிலையை அடைய ஆரம்பித்தன.

12. மற்றும் நம் நாட்டில் சென்ற 20 வருடங்களில் விவசாய உற்பத்திப் பொருள்களும், விவசாயப் பொருள்களின் ஏற்றுமதியும் குறைந்து வருவதாகத் தெரிகிறது. விவசாயத்திலிருந்து கிடைக்கும் சொற்ப வருவாயினின்றும், பிறநாட்டுப் பண்டங்களை அபரிமிதமாக வாங்கி வருவதாயும் தெரிகிறது. 40 ஆண்டுகளில் நம் நாட்டு ஜனத்தொகை 9½-கோடி யதிகமாகியும் அதே விகிதத்தில் நாட்டின் வருவாயை உயர்த்த எவராலும் எவ்வகையான முன்னேற்றத் திட்டங்களும் யோசிக்கப்படவில்லையே என்று நினைக்கையில் மனம் பதறுகிறது. மேனாட்டுச் செல்வமனைத்தும் விவசாயிகளின் எண்ணிக்கையைக் குறைத்து, தொழிலாளிகளின் எண்ணிக்கையை அதிகம் செய்ததால்தான் ஏற்பட்டன. இதற்கு அமெரிக்கா ஒரு சிறந்த உதாரணம். எனவே நம் நாடும் தலைதூக்கி சிறப்புற வேண்டுமானால் உழவர்களின் தொகையைக் குறைத்து, மக்களுக்குப் பொதுக்கல்வி புகட்டி, தொழிற்பயிற்சியளித்து, இலாபகரமான தொழில்முறைகளில் ஈடுபடும்படித் தூண்டவேண்டும். இதை ஒவ்வொரு இந்தியனும் நன்குணரவேண்டும். இதனால், "மேழிச்செல்வம் கோழை

படாது", "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வர், பழுதுண்டு வேறோர் பணிக்கு" என்னும் உண்மைகளை மறுத்ததாகக் கொள்ளக்கூடாது. இவை முற்கால வாழ்க்கைக்குச்சரி. தற்கால நாகரிக வாழ்விற்கு இது ஒவ்வாது. ஊருடன் ஒத்துவாழ்வது போன்று வேறுநாடுடன் ஒத்து வாழவேண்டிய காலமிது. இல்லையேல் பிறநாட்டு நாகரிகத்தால் நாம் அடிமைகளாக்கப்பட்டு, பின் இந்தியப் பூண்டேயின்றி நசிக்கநேரிடும். இக்கஷ்டங்களைக் களைய நாம் மற்றநாடுகளை அநுசரித்து நம் வாழ்க்கைத் திட்டங்களையும், செயல்களையும் மாற்றி யமைத்துக்கொள்ள வேண்டியது மிகமிக இன்றியமையாதது ஆகும்.

13. விவசாயத்தில் ஈடுபடும் பாதி ஜனத்தொகையைத் தொழிலில் அமர்த்தப் போதிய தொழிற்சாலைகளில்லையே என்று பலர் கேட்கலாம். ஆனால் இப்புத்தகத்தில் விவரித்திருக்கிறபடி முயற்சி செய்தால் அநேக உற்பத்தி ஆலைகளை அதிக அளவில் ஆங்காங்கு ஏற்படுத்தலாம்; அதனின்று பல்கோடி மக்களுக்குப் பல துறைகளில் வேலை கிடைக்கும் என்றுறுதி கூறலாம். உற்பத்தித் தொழில்களை யொட்டி பல்வேறு சார்புத்தொழில்களும், வியாபாரக் கழகங்களும் நாணயமாற்றுச் சங்கங்களும், பாங்குகளும் உண்டாகும். அவைகளிலும் அநேக மாந்தர்களுக்கு வேலை யகப்படும். எனவே நாட்டின் பொருளாதார நிலையின் வளர்ச்சியைப் பொருத்து விவசாயத்தைக் காட்டிலும் உற்பத்தித்தொழிற் சிறப்புதான் மேன்மையானது என்றும், அதிக இலாபகரமானதென்றும், உலகப்போக்கினின்றும் வெள்ளிடை மலை போல் அறியக்கூடியதாக இருக்கிறது.

1895-ம் ஆண்டில் இங்கிலாந்தில் பல ஆலை முதலாளிகளின் அநுமதியின்பேரில் பிரசுரிக்கப்பட்ட "இதனடுத்த ஐந்தாண்டுகள்" (The next five years) என்னும் நூலில் "நம்மால் அறியப்படும் உற்பத்தித்தொழில் நம் நாட்டின்

பொது வாழ்க்கைக்கு அடிப்படையானது. நம் உற்பத்தித் திறனை அதிகப்படுத்திய கருவி அதுதான். இதனுல் நம் நாட்டுப் பெரும் ஜனத்தொகையை நன்கு போஷிக்க முடியும். நம்மக்களின் வாழ்வுநிலை நாம் விரும்பிய அளவிற்கு உயர எழாவிட்டாலும், முன்னூற்ருண்டுகளைக் காட்டிலும் வாழ்வுநிலை எவ்வளவோ உயர்ந்திருக்கிறதெனக் கூறலாம்" என்று வரையப்பட்டிருக்கிறது. இதிலிருந்து தொழிலுக்கு எவ்வளவு சிறப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது என்று விசதமாகும்.

14. ஆங்கில அரசாங்கத்தின் நோக்கங்கள் இந்தியாவைப் பொருத்த மட்டிலும், இங்கிலாந்தைப் பொருத்த மட்டிலும் வெவ்வேருனவை. நம் நாடு இன்னும் வெகு காலங்கள் வரையில் விவசாயத்திலேயே ஈடுபட்டிருக்க வேண்டும் என்பது இந்திய அரசாங்கத்தின் கொள்கை போலத் தெரிகிறது. இது அரசாங்கத்தின் செயல்களிலிருந்து நன்கு விளங்குகிறது. போருக்கு வேண்டிய தளவாடங்களையும் தேவைகளையும் வாங்க சாம்ராஜ்ய நேச தேசத்தாரிடம் ஒப்பந்தம் செய்யப்பட்டிருக்கிறது. ரோஜர் விசாரணைக் கமிஷனும் (Roger Commission) கிழக்குதேசப் பொருளீட்டுக் கழகமும் (Eastern Group Supply Conference) இவ்வாறுதான் சிபார்சு செய்திருப்பதாகவும் தெரிய வருகிறது. இந்தியாவிலுள்ள தொழிற்சாலைகளில் அதிக யுக்தியும், தொழிற் பயிற்சியும் தேவையில்லாத சில சாமானிய போர்க்கலங்கள் மட்டும் தயாரிப்பதற்கு அநுமதியளிக்கப்பட்டிருக்கிறது. சிறந்த விலையேறப் பெற்ற பெரும் போர்க்கலங்கள் யாவும் அமெரிக்கா, கானடா, ஆஸ்திரேலியா முதலிய நாடுகளிலேயே செய்யப்படுகின்றன என்ருல் நம் அரசாங்கத்தின் தொழிலபிவிருத்தி நோக்கம் நன்கு விளங்கவில்லையா?

15. நம் அரசாங்க நோக்கங்களால் நாம் கீழ்நிலைக்குத்தான் கொண்டுசெலுத்தப்படுகிரேம் என்று நன்கு

விளங்கும். இயந்திரத் தொழிலபிவிருத்தியாலும், வியாபார வளர்ச்சியாலும் தான் நம் நாட்டிற்கு நற்கதி ஏற்பட வேண்டும். "இந்தியத்தொழில் வளர்ச்சிக்குத் தக்க சலுகை காட்டப்பட்டிருந்தால்,......................சாம்ராஜ்யத்திலுள்ள அரசுரிமை பெற்ற மற்ற நாடுகளைப் போன்று பொருளாதார வரவு செலவு உரிமை இந்தியருக்கு அளிக்கப்பட்டிருந்தால், இதற்குள் இந்திய நாடு இயந்திரத் தொழிலில் மிக்க மேம்பாட்டை அடைந்திருக்கும்" என்று 20 வருஷங்களுக்கு முன்பே "இந்தியப் பெருளாதாரக் கமிஷன்" கூறியுள்ளது. இது நாம் கூர்ந்து ஆலோசிக்கவேண்டிய முக்கிய விஷயம்.

### 3. இயந்திரத் தொழில்களின் பிரிவினை.

16. தற்காலத்தில் ஏற்பட்டிருக்கும் இயந்திரத் தொழில்களை (1) பெருந்தொழில்கள் (2) ரசாயனத் தொழில்கள் (3) இதர தொழில்கள் என்று மூவகையாகப் பிரிக்கலாம்.

17. மற்றும், தொழில்களை, அவைகளிலிடப்பட்ட மூலதனத்தின் அளவைக்கொண்டு, 30 லக்ஷத்திற்கு மேற்பட்ட மூலதனத்தைக் கொண்ட தொழில்களைப் பெருந்தொழில்கள் எனவும், ஒரு லக்ஷத்திற்கு மேற்பட்டு, 30 லக்ஷத்திற்குக் குறைவான மூனதனத்தைக் கொண்டவைகளை நடுத்தரமான தொழில்கள் எனவும், ஒரு லக்ஷத்திற்குக் குறைவான மூலதனத்தைக் கொண்டவைகளை சிறு தொழில்கள் எனவும் பாகு படுத்தலாம்.

இப்போது நம்நாட்டில் அநேக தொழில்கள் சரியான திட்டங்களும் ஒழுங்குமின்றி, தனிப்பட்ட நபர்களாலும், லிமிடெட் கம்பெனிகளாலும் துவக்கப்பட்டு நடந்துகொண்டிருக்கின்றன. ஆனல் தொழில் அபிவிருத்தி அதிகப்பட

வேண்டுமானால், வெளிநாட்டினின்று இறக்குமதி குறைய வேண்டுமானால், நம் நாட்டிலேயே எல்லா இயந்திரங்களையும், இரும்பு உருக்குப் பண்டங்களையும் செய்து கொள்ளவேண்டும். இங்கே செய்யமுடியாத, நம் பொருளாதாரத்தைக் குறைக்காத பண்டங்களை வெளிநாடுகளிலிருந்து வாங்குவதில் ஒருவருக்கும் ஆக்ஷேபணை இருக்காது.

18. பெருந்தொழில்களை ஏற்படுத்தி, மற்ற சார்புத் தொழில்களுக்குத் தேவையான இயந்திரங்கள், கருவிகள், சாதனங்கள் இவைகளைச் செய்வதால் வெளிநாட்டு இறக்குமதி குறையும்; நம் செல்வமும் நம்மிடமே தங்கிச் செழிக்கும். ஆதலால் ஒவ்வொரு மாகாணத்திலும், இயற்கை வசதிகளை அநுசரித்து ஒன்றிரண்டு பெருந்தொழில்களை ஏற்படுத்தி மற்ற தொழில்களுக்குத் தேவையானவைகளைச் செய்யவேண்டும். மூன்று வருடக் காலாவதியில் நம் நாட்டிற்குத் தேவையான எல்லாப் பொருள்களையும் செய்து விடலாம். இப்படிச் செய்வதால் தொழிலபிவிருத்திமட்டிலுமன்றி அரசாங்க வருமானமும் அதிகரிக்கும். மக்கள் வருமானமும் பெருகும். எனவே நாட்டின் செழிப்பை யுத்தேசித்து எல்லாவகையான இயந்திர உற்பத்தி வசதிகளை ஏற்படுத்துவது அரசாங்கத்தின் முதற் கடமையாகும். அதிலும் பெரும் உற்பத்திசாலைகளையமைப்பது மிகமிக அவசியம். ஆனால் இந்தியாவில் இத்தகைய சீரிய நோக்கங்கள் கிடையாது. வாய்த்த சந்தர்ப்பங்களையும் கைசோரவிட்டுக்கொண்டிருக்கிறோம்.

19. அடியில் சில முக்கியமான தொழில்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவை நம் நாட்டிற்கு இப்பொழுதே அதிக தேவையாக இருக்கின்றன. அவையாவன:

(i) கப்பல் கட்டுவது.
(ii) இரயில் என்ஜின்கள், வாகன்கள், வண்டிகள் அமைப்பது.

(iii) எண்ணெயாலும் ஓடும், காரிவாயுவாலும் ஓடும் விசை இயந்திரங்களை உண்டாக்கல்.

(iv) மோடார் வண்டிகளைக் கட்டுதல்.

(v) ஆகாய விமானங்களை அமைத்தல்.

(vi) இதர உற்பத்தித் தொழில்களுக்கு வேண்டிய இயந்திரங்களை அமைத்தல்.

(vii) மின்சார உற்பத்தி இயந்திரங்களையும், அது சம்பந்தப்பட்ட கம்பங்கள், கருவிகள், மின்சார மோட்டார்கள் முதலியவைகளை உண்டாக்கல்.

(viii) யுத்தத் தளவாடங்கள், ஆகாய விமானங்கள், அதன் என்ஜின்கள், யுத்த மோடார் வண்டிகள், துருப்பு டாங்கிகள், துப்பாக்கிகள், பீரங்கிகள், குண்டுகள், ரவை, தோட்டாக்கள் முதலிய போர்க்கருவிகளைச் செய்தல்.

(ix) எல்லாவிதமான இயந்திரக் கருவிகள் (Machine Tools), விஞ்ஞான நுண்ணிய அளவு கருவிகள் (Scientific Precision Instruements) அமைத்தல்.

(x) இரசாயனத் தொழில்கள்; அதாவது கந்தகாமிலம், உரங்கள், சோடாக்காரங்கள், சலவைப் பொடி இவைகளைத் தயாரித்தல்.

(xi) விவசாயக் கருவிகளையும் உபகரணங்களையும் அமைத்தல்.

(xii) அலுமினியத்தை பூப்பொருள்களிலிருந்து பிரித்தெடுத்து அலுமினியப் பொருள்களை உண்டாக்குதல்.

(xiii) சாயங்கள், ரேயன் என்னும் செயற்கைப் பட்டு இவைகளைத் தயாரித்தல்.

இப்போது இந்தியரின் தேவைக்கு வேண்டிய பொருள்களை அளிக்க வேண்டுமானால் மேலே கூறப்பட்ட

எல்லாத் தொழில்களையும் பல இடங்களில் ஏற்படுத்த முயற்சிக்கவேண்டும். காலதாமதம் நாசத்திற்கிடமாகும். தக்க ஆலோசனைக் கமிட்டிகளைத் திரட்டி நிபுணர்களின் உதவியால் போருக்குப்பின் தொழிலபிவிருத்திக்கு இன்னின்ன திட்டங்கள் ஏற்படுத்தி இன்னின்ன வகையில் முயற்சிக்க வேண்டுமென இப்பொழுதே ஆலோசிக்க வேண்டும். மிக்க நம்பிக்கையும் பொருப்பும் வாய்ந்த தொழிலபிவிருத்திப் பிரமுகரை இக்கமிட்டிக்குத் தலைவராகக் கொள்ளவேண்டும்.

20. நடுத்தரத் தொழில்களுக்கு, பெருந்தொழில்கள் போன்று அரசாங்கத்தாரால் அவ்வளவு உதவி தேவை என்பதில்லை. நாட்டிலுள்ள முதலாளிகளே கூட்டுக்கம்பெனிகள் மூலமாய் அவைகளை ஏற்படுத்தலாம். பண உதவி இல்லாவிட்டாலும் அரசாங்கத்தாரால் அநுசரணை, அநுதாபம் இவை ஏற்படவேண்டியது அவசியம். மற்றும் மற்ற செல்வாக்கான நாடுகளைப்போன்று இத்தகைய தொழிலபிவிருத்திக்கு வெளிநாட்டிலிருந்து போட்டி ஏற்படாவண்ணம் தக்க காப்பு அரசாங்கம் கொடுக்க வேண்டும். தொழில் ஏற்பட்டு, ஆரம்பத்தில் தொழில் சீரான நிலைக்கு வரும்வரையில் அதாவது ஒரு குறிப்பிட்ட காலம் வரையில், போட்ட முதல்களுக்குத் தக்க வட்டி கட்டும்படியாவது அரசாங்கம் பொருளுதவி செய்யவேண்டும். மைசூர் முதலிய சமஸ்தானங்களில் இவ்வாறு நடுத்தரத் தொழில்களுக்கு அரசாங்கக்காப்பு (State aid) அளிக்கப்பட்டிருக்கின்றன. இவ்வாறு அரசாங்கக்காப்பு பெற்ற தொழில்கள் நாளடைவில் ஜனங்களுக்கும் அரசாங்கத்திற்கும் மிகுந்த வருவாயை அளிக்கக் கூடியனவாக ஆகும்.

21. சிறுபான்மைத் தொழில்களும், குடிசைத் தொழில்களும் சரியானமுறையில் விருத்தியடைய பல நிபந்தனைகள் தேவை. முக்கியமாய் இத்தகைய தொழில்களில்

ஈடுபடுபவர்களுக்குச் சரியான கல்வியும், தக்க பயிற்சியும் இன்மையே தொழில் ஓங்காததற்குக் காரணம். ஆகையால் தக்க பிரதிபலன் கிடைப்பதில்லை. தக்க கல்வி, போதிய தொழிற்பயிற்சி, வருவாயை யதிகமாக்கும் சுலப மார்க்கங்கள், மூலதனத்தை விருத்தியாக்கும் வழிகள், சிக்கனம், வியாபார தந்திரம் இவையாவும் நன்கு அறியப் பட்டால் தொழில் வளர்ச்சிக்குச் சாதகமாக ஆகும். மற்ற நாடுகளில் நடந்துவரும் சிறு தொழில்களைப்பற்றிச் சரியான புள்ளி விபரங்கள் கிடைப்பதில்லை. ஆதலால் எவ்வெவ் வம்சங்களில் எத்தகைய விருத்திகள் தேவை என்று அறிவதற் கிடமில்லாமலிருக்கிறது. புள்ளி விவரங்களின் ஆவசியகம் எல்லாத் தொழில்களுக்கும் உண்டு.

22. கிராமாந்திரங்களில் பொதுவாக 5 அல்லது 6 மாதங்கள் விவசாயிகளுக்குத் தொழில் இருப்பதில்லை. சிறு தொழில்களையும், கைத்தொழில்களையும் விஞ்ஞான முறையில் செய்ய வசதிகள் இருந்தால் விவசாயிகளுக்கு வருவாயில்லாத காலத்து மிக்க சாதகமாக விருக்கும். இவைகளை உத்தேசித்து இத்தொழில்களுக்குச் சரியான திட்டங்களை ஏற்படுத்த வேண்டும். அரசாங்கத்தின் உதவியும் ஊக்கமும் அவசியம். கிராமப் பொருளாதாரத்தில் குடிசைத் தொழில்கள் மிக முக்கியமானவை. மூலதனம் இல்லாததே இத்தொழில்களுக்கு முதற்றடை. முதலாளிகள் தக்க பணம் உதவி, தொழில்களை ஏற்படுத்தி, புள்ளி விவரங்களைத் திரட்டி தக்க உதவிபுரிய வேண்டும். வேலையற்ற விவசாயிகளை வேலையில்லாக்காலத்தில் தொழிலில் அமர்த்தும் உத்தேசத்துடனேயே கிராமக் கைத்தொழில்கள் முதலில் ஆரம்பிக்கப்பட வேண்டும்.

23. சார்புத் தொழில்கள்:— இந்தியாவில் 232 ஜில்லாக்கள் உள. ஜில்லா அரசியலே நாட்டு அரசியலுக்கு அடிப்படை. ஜில்லாக்களில் உற்பத்தித் தொழில்களுக்கும்,

ஜனங்களுக்கும் தொடர்பற்றிருப்பதே நாட்டின் சீர்கேட்டிற்குக்காரணம். ஒவ்வொரு ஜில்லாவிலும் வருவாய், வருஷத்திற்கு வருஷம் வெவ்வேறாக இருக்கிறது. அதுபோல நபர் ஒன்றிற்கு வருஷ வருமானம் காலத்திற்குக் காலம் இடத்திற்கு இடம் வேறுபடும். எனவே ஒரு ஜில்லாவைக் கொண்டு, அந்த ஜில்லாவில் அடிப்படையான வாழ்க்கைக்கு மட்டிலும் தேவையான பொருள்களின் அளவும், தொழிலின் அளவும், இன்னவையென்று கணக்கிடலாம். உதாரணமாக ரெவின்யூ புத்தகங்களிலிருந்து விவசாய உற்பத்தியை ஒருவாறு கணக்கிடலாம். தொழில் உற்பத்தியைப் பொறுத்து, அங்கங்கே விசாரித்துப் புள்ளி விபரங்களைத் தயாரித்து விடலாம். இதேபோல் ஒவ்வொரு ஜில்லாவிலும், கைத்தொழில், குடிசைத்தொழில், ஆலைத்தொழில், விவசாயம் இவைகளினின்று வருஷ வருவாய் இன்னதென்று கணக்கிடலாம். இதனின்று ஏழ்மை நிலைக்கு ஒவ்வொரு ஜில்லாவும் எவ்வளவு உயர்வு தாழ்வு என்று ஊகிக்கலாம்; எவ்வாறு வாழ்வு நிலையை உயர்த்தலாம் என்றும் திட்டம்போட வசதியாகும்.

தொழிலபிவிருத்தி, வருவாய், ஜனத்தொகை, பொருளாதாரநிலை, இவைகளை ஜில்லாக்கமிட்டிகள் கூர்ந்தறிய வேண்டும். தொழிலபிவிருத்தியை உண்டாக்கல், அதற்குத் திட்டங்கள் போடுதல், தொழில் வருமானத்தையும், விவசாய வருமானத்தையும் உயர்த்தும் வகைகளைத் தேடுதல், ஜனங்களுக்கு இவ்விஷயங்களில் ஊக்கமளித்தல் இவை முதலிய நற்கருமங்கள்தான் அ. இ. உ. சங்கத்தாரால் எதிர்பார்க்கப்படுகின்றன.

அநுபந்தம் II-வது அட்டவணையில் சிறுபான்மைத் தொழில்களின் ஜாபிதா கொடுக்கப்பட்டிருக்கிறது. கிராமத் தொழிலபிவிருத்திக்கு அவைகளைக் கைக்கொள்ளலாம். கூடியமட்டிலும் வாழ்க்கை அவசியத்திற்குத் தேவையான

பண்டங்களையே கிராமங்களில் உண்டாக்க வேண்டும். இவ்விதம் பத்து வருடங்கள் தொடர்ந்து நடத்தினுல் வாழ்க்கைநிலை தன்னுல் உயர்ந்து, வாழ்க்கை இன்பத்திற்கு (Luxury)த் தேவையான பொருள்களின் அவசியம் ஏற்படும். அதனுல் பல்வேறு சார்புத்தொழில்களும், பெருந்தொழில்களும் ஏற்படக் காரணமுண்டாகும்.

## 4. தொழில்கள் துவக்கமும், இயக்கமும்.

24. தொழில்களில் நற்பயன் பெற, தொழில்களில் ஈடுபடுபவர்களுக்குத் தக்க தொழிற்பயிற்சி யூட்டவேண்டும். இக்காலத்தில் தொழில்களுக்குப் பல சிக்கல்களும், தடங்கல்களும் ஏற்படுவது இயற்கை. இவைகளில் மனம் சோரவிடாது, தக்க நிபுணர்களின் (experts) உதவியால் அவைகளைத் திருத்த முயலவேண்டும். கல்லூரிப் படிப்பு, விஞ்ஞானப் பயிற்சி, தொழிற்பயிற்சி, வியாபாரப்பயிற்சி, சட்டப்பயிற்சி, தொழிலநுபவம், இவைகளைப் படைத்த இளைஞர்களை அமர்த்துவது தொழிலபிவிருத்திக்கு முக்கிய அம்சமாகும். தவிர, பரம்பரையான தொழிலநுபவம் உள்ளவர்களையும், இயற்கையாகவே ஊக்கம் படைத்தவர்களையும் அமர்த்துவதாலும் தொழில்களுக்கு நற்பயன் அளிப்பதாக ஆகும். மற்றும் தொழிலாளர்களுக்கு ஊக்கம், சுறு சுறுப்பு, ஜாக்கிரதை, கீழ்ப்படிதல் இவைகளும் தேவை.

ஒரு இடத்தில் தொழில்களை ஆரம்பிப்பதற்கு முன், அவ்விடத்தில் ஏற்கனவே இருந்துவரும் தொழில்களையும், மக்களின் பரம்பரைப் பணிகளையும் (occupations) அறிய வேண்டும். தொழில்வேறு; பரம்பரைப் பணிவேறு. பரம்பரைப் பணி ஒரு தனிப்பட்ட சமூகத்தார் அல்லது ஜாதியாரைப் பொருத்தது. ஆனுல் "தொழில்" என்று இக்காலத்தில் அறியப்படும் சொல்லிற்கு, பலரால் கைக்கொள்ளப் பட்டு ஒருவகையான பலனை உத்தேசித்துச் செய்யப்படும் ஆலைத்தொழில் ஆகும்.

## தொழில்கள் துவக்கமும் இயக்கமும்.

ஆலைத்தொழில் முறையில் தொழில்கள் செய்வதினின்று உற்பத்தி முறைகளில் பூரண மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன. சென்ற 40 வருட காலத்திற்குள் மின்சார முறையாலும், ரசாயன முறையாலும் ஆலை இயந்திரங்கள் மிக்க சீர்ப்பட்டு, கையால் இயலாத பல்வேறு நூதனப் பண்டங்களை உண்டாக்க முடிகிறது. தவிற, ஏராளமான பொருள்களைக் குறைந்த விலையில், மிக்க சிக்கனமாகக் குறைந்த கால அளவில், மிக்க நேர்த்தியாகவும் மாருத நயத்துடனும் செய்ய இயலுகிறது.

25. பொதுவாக, தற்கால ஆலைகளில் இயந்திரங்கள் யாவும் இயந்திர விசையால் செலுத்தக் கூடியனவாக இருக்கின்றன. ஆதலால் மிருகங்களுக்கும் மனிதர்களுக்கும் அதிக துன்பமின்றி ஏராளமான பொருளை உற்பத்தி செய்ய முடிகிறது. கைத்தொழிலால் செய்வதைக் காட்டிலும் இயந்திரங்களால் செய்யப்படுவதில் அகவிலை மிகக் குறையும். இப்போது இருக்கும் போக்கு வரவு சாதனங்களும், வியாபார உயர்வும் இயந்திர ஆலைத்தொழிலால் ஏற்பட்டனவே.

26. தொழிலின் சிறப்பு பண்டத்தின் சிறப்பால் தான் ஏற்படவேண்டும். ஏற்படுத்தும் தொழில் சீரிய வருவாயைத் தருமுன், தொழிற்சாலைக்கருகில் இலாபகரமான மார்கெட்டுகள் இருக்கவேண்டும். மூலப்பொருள்களும், இயந்திர விசையும் சமீபத்தில் கிடைக்க வேண்டும். கூலியும் சிக்கனமாக அமையவேண்டும். ஆனல் தொழில் ஓரளவிற்கு ஓங்கி சிறப்பெய்திவிட்டால், மார்க்கட், மூலப்பொருள், இயந்திரவிசை, கூலி இவைகள் கிடைக்குமிடமும் இவைகளின் தூரமும், கடினமும் தொழிலைப்பாதிக்கா.

நன்முறையில் தொழிலை நடத்த :—

1. கண்காணிப்பு.
2. பணம்.

3. இயந்திரங்கள்.
4. இயந்திர விசை.
5. மூலப்பொருள்கள்.
6. தொழிலாளிகள்.
7. விற்பனை வசதி.
8. அரசாங்க சலுகை.

இவை எட்டும் தேவையாகும்.

தகுந்த நிபுணர்களைக்கொண்டும், எஞ்ஜினீயர்களின் உதவியைக் கொண்டும், இட வசதிகளையும், இதர வசதிகளை யும் முதலில் ஆராயவேண்டும். மற்றும், பெருந்தொழிலைத் துவக்குமுன், இதர நாடுகளில் இவைபோன்ற தொழில் கள் எவ்வாறு நடத்தப்படுகின்றன என்றறிவதுடன், பிற நாட்டுத் தொழிற்கழகங்களுடன் கூடி தொழிலை ஆரம்பிப் பது நன்று. பின்பு, தொழில் ஒருவாறு விருத்தியடைந்த வுடன் நாம் தனியாகப் பிரிந்து கொள்ளலாம்.

27. மூலதனத்தைச் சேகரிப்பது அடுத்தபடி முக்கிய அம்சமாகும். பொதுஜனங்களிடமிருந்து பங்குகள் சேக ரித்து சட்டசம்மதமான லிமிடெட் கம்பெனிகள் ஏற் படுத்துவதுதான் தகுதியானது. சென்ற 70, 80 ஆண்டு களாக நாகரிகம் மேம்பாடடைந்த இதர நாடுகளில் இவ் வகையாற்ருன் தொழிற்சாலைகள் நிறுவப்பட்டு வந்திருக் கின்றன. பல நாடுகளில், செல்வவான்களில் தனிப்பட்ட நபராலும், குறைந்த எண்ணிக்கையுள்ள நபர்களால் கூட்டு வியாபார முறையாலும் தொழிற்சாலைகள் நடத்தப் படுகின்றன. ஆனல் நம் நாட்டில் பலருடைய கூட்டுற வால் ஏற்படும் கம்பெனிகள்தான் சாலச் சிறந்ததென கருதப்படுகிறது.

இயந்திரங்களை நடத்தத் தக்க இயந்திர விசை வேண் டும். நிலக்கரி, எண்ணெ, விறகு இவைகள் எரிப்பதால்

உண்டாகும் நீராவியாலோ, கரி, மரத்தூள், கடலைப் பொட்டு இவைகளால் உண்டாக்கப்படும் எரிவாயுக்களாலோ அல்லது மின்சார விசையாலோ இயந்திர விசைகளை உண்டாக்கலாம். இதுகாறும் நிலக்கரியும், எண்ணெயுந்தான் அதிகமாகப் பயன்பட்டுவந்தன. இனிமேல் "மின்சார யுகம்" தான் வரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

28. தொழிலை நடத்துவதென்பது சிக்கலான விஷயம். தொழிலுக்குத் தொழில் "நடத்தும் முறை" மாறும்; அவ்வத் தொழிலை நடத்திப்பார்த்தால் தான் அதனதன் தேவை நன்கு விசதப்படும். "கட்டிடம் கட்டிப்பார், கல்யாணம் செய்துப்பார், தொழிலை நடத்திப்பார்" என்பது புதுமொழி.

முக்கியமாய் மூலப்பொருள்களை வாங்குவது, தொழிலில் இடுவது, புதுப்பண்டங்களை உண்டாக்குவது, பின் அவைகளை இலாபத்திற்கு விற்பது என்பதுதான் பொதுவான தொழில் நடப்பு முறையாகும். போட்டியதிகமானல் சரக்குகளின் நயத்தை அதிகப்படுத்தவேண்டும்; அப்பொழுது விற்பனை அதிகரிக்கும்; அளவையும் அதிகப்படுத்தவேண்டும். உற்பத்திச் சிலவைக் குறைக்கவேண்டும். இவைகள் தொழில் முறையில் கையாளப்படும் முக்கிய விஷயங்கள். இத்தகைய பலனை அடையத் திறமையான கண்காணிப்பு அவசியம். தொழிலாலையின் மானேஜர் மிக்க நிபுணராக இருக்கவேண்டும். அத்தொழிலைப் பற்றிய எல்லாத் தொழில் இரகசியங்களையும், சூக்குமங்களையும் அறியும் ஆற்றலும், ஊக்கமும் நிறைந்தவராக இருக்கவேண்டும்.

இதுமட்டிலுமல்ல; தொழில் நடத்தும் செயலாளர்களும், கல்லூரிப் படிப்பு, விஞ்ஞான அறிவு, வியாபாரத்

தந்திரம், தொழிற் பயிற்சி இவை பெற்ற இளைஞர்களாக இருக்கவேண்டும். இவர்களால்தான் தொழில் முன்னேற்றம் ஏற்படும். இது மேனாடுகளில் அநுஷ்டிக்கும் நன்முறை. கல்லூரிப்படிப்பு, தொழிற் பயிற்சிபெற்ற அநேகமாக எல்லா மாணவர்களும் தொழில்களில் ஈடுபடும்படிச் செய்யப்படுகின்றனர். ஆனால் நம் நாட்டில் கல்லூரிப் படிப்பு வாய்த்த பல இளைஞர் இருக்கின்றனர். தக்க வேலைபெற முடியாமலும், தொழிற்பயிற்சி அடைவதற்கில்லாமலும், அல்லலுறுகின்றனர். பல தொழில்களை ஆங்காங்கு ஏற்படுத்துவதால் படித்த இளைஞர்களுக்கு வேலை கிடைத்து, அதனால் வறுமை நீங்கி, செல்வமோங்கி, நாடு செழிக்கும் என்பதில் யாது ஐயம்?

தொழில் நடத்தும் முறையில் சரியான கணக்குகளை வைப்பதும், புள்ளிவிவரங்களைத் தயாரிப்பதும் ஒரு முக்கிய கடமையாகும். தொழிலபிவிருத்தி, நாட்டின் பொது அபிவிருத்தி இவைகளுக்குத் தொழில் சம்பந்தப்பட்ட புள்ளி விவரங்கள் அத்தியாவசியம். அவை அபிவிருத்தியின் அளவுகோல்களாகும். அவைகளைச் சரிவரச் சேகரிப்பது மேன்மையை விரும்பும் ஒவ்வொரு தொழிலின், ஒவ்வொரு நாட்டின் முதற் கடமையாகும்.

29. "ஆலைத்தொழில் கண்காணிப்பு" என்பது அலாதியான ஒரு படிப்பு. இது அநுபவத்தில்தான் ஏற்படும். பழகப்பழகப் புதுமுறைகள் தோன்றும். குறைந்த செலவில், குறைந்த ஆட்களைக்கொண்டு, குறைந்த பொருள்களால், குறைந்த காலவரையில், பெருவாரியான பொருள்களை உண்டாக்கி, தக்க வசீகரமான விளம்பரங்கள் செய்து, மக்களிடத்து அவைகளை வாங்கும் ஆர்வத்தை உண்டாக்கி, பண்டங்களை விற்று மிக்க ஊதியத்தை அடைவதே எல்லாத் தொழில்களின் ஆதார நோக்கமாகும்.

நம் நாட்டு அரசாங்கத்தில் தனியாகத் தொழிலிலாகா (Industrial Department) இருக்கிறது. ஆனல் தொழிலபிவிருத்திச் சங்கங்களும் கழகங்களும் போதிய எண்ணிக்கைகள் கிடையா. தேச முன்னேற்ற-அவா எழ, தக்க தொழிலபிவிருத்தி சங்கங்களைப் பல ஏற்படுத்துவதுடன், பாதுகாப்பு வரிகளைப் போட்டு, பாங்குகளின் வசதிகளை யதிகமாக உண்டாக்கிப் புள்ளி விவரங்களைத் தயாரித்து, தொழில் விருத்திக்கான முறைகளை ஆலோசிக்க வேண்டும். இவ்வாறு செய்வதால் மூலதனம் கொடுத்துதவியவர்களுக்கு நம்பிக்கை யேற்படுவதுடன் மேற்கொண்டு தொழில்களைப் புதிதாக அமைப்பதற்கும் விசாரிப்பதற்கும் தூண்டுதலாகவிருக்கும்.

## 5. தொழில்கள் : துவக்கமும் இயக்கமும்.

( தொடர்ச்சி. )

30. முன்னத்தியாயத்தில் தொழிலபிவிருத்தி சங்கங்களின் அவசியம் கூறப்பட்டது. தொழிலின் நடப்புமுறைகளைச் சீர்படுத்தவும், தொழில்களைச் செல்வாக்குடையனவாகச் செய்யவும், தொழிலபிவிருத்தியே நாட்டின் செழிப்பிற்குக் காரணம் என்று நாட்டு மக்களுக்கு எடுத்துக் கூறவுமே அ. இ. உ. சங்கம் ஏற்பட்டுள்ளது.

பெருந் தொழில்கள், சார்புத் தொழில்கள் இவைகளை ஏற்படுத்தும் வகையும், அவைகளை நடத்தும் முறையும் சென்ற அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ளன. குடிசைத் தொழில்களும் தேசமுன்னேற்றத்திற்கு அவசியமானவை. அவைகளையும் சட்டதிட்டங்களுக் குட்பட்டவைகளாகச் செயல்வேண்டும். இப்போது பல இடங்களில் தனிப்பட்ட நபர்களால் தம் யுக்தம்போல் சட்ட திட்டங்களுக் குட்படாமல் தனிப்பட்ட முறையில் தொழில்கள் நடந்து

வருகின்றன. 1931-ம் ஆண்டில் எடுத்த ஜனத்தொகைப் புள்ளி விவரங்களில், மலைத்தோட்டம், சுரங்கம், ஆலைகள், போக்கு வரவு, இவைகளில் 2½ கோடி ஜனங்கள் வேலை பார்த்துவருவதாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது. இவற்றில் ½ கோடி ஜனங்கள்தான் சட்ட திட்டங்களுக்குட்பட்ட ஆலைத்தொழில் முதலியவைகளில் வேலைசெய்வதாக அறியப்பட்டது.

31. ஏழை ஜனங்களை உத்தேசித்துச் சிறு தொழில்களையும், கிராமக் கைத்தொழில்களையும் குடிசைத் தொழில்களையும் பெருவாரியாக ஏற்படுத்துவது இன்றியமையாதது. பெருந் தொழில்கள் போன்று, கிராமக் கைத்தொழில்களையும் சட்ட திட்டங்களுக்குட்படுத்தி, தேவையான பண வசதி ஏற்படுத்திக்கொடுத்து, தக்க நிபுணர்களைக்கொண்டு சீர்ப்படுத்தினால் கிராமப் பொருளாதாரம் உயர்வடைவதன்றி, அரசாங்கத்திற்கும் நாளடைவில் அதிக வருமானத்தை யளிக்கக்கூடியதாக ஆகும்.

அமெரிக்கா முதலிய ஐக்ய நாடுகளில் ஏற்பட்ட செழிப்பிற்குக் காரணத்தை நன்கு ஆராய்ந்தால், அங்கு அரசாங்கத்தாரும், செல்வவான்களும் தொழில் பெருக்கத்திற்கு வேண்டிய அளவு உதவிகளைச் செய்வதில் சலிப்படைவதே இல்லை. நவீன விஞ்ஞான முறையில் அவைகள் நடத்தப்படுகின்றன. அவ்வப்போது விஞ்ஞானிகளால் கண்டுபிடிக்கப்படும் எல்லா வகையான புது உண்மைகளையும் முறைகளையும் தொழிலில் ஈடுபடுபவர்கள் அநுஷ்டிக்கிறார்கள். நாடு செழிக்க இவைகளே முதற்காரணம். மற்றும், மக்கள் தங்கள் செயற்றிறனை அதிகப்படுத்தும் நோக்கங்கொண்டவர்கள். அதற்காகத் தேவையான படிப்பையும், பயிற்சியையும் கொள்ள விருப்பமுள்ளவர்கள். ஆனால் நம் நாட்டிலோவென்றால், நாம் பிற நாட்டினர் வசப்பட்டு அடிமையெண்ணம்

நிறைந்து காலங்கடத்திவருவதால் உன்னத எண்ணங்களும், உயரிய நோக்கமும் மனதில் எழாமல் இருக்கின்றன; நாடும் செழிப்பதற்கில்லாமல் இருக்கிறது. இதை நம் நாட்டு மக்கள் யாவரும் ஆழ்ந்து சிந்திக்கவேண்டும்.

32. சிறு தொழில்களை (1) சீர்திருத்தப்பட்டவை (2) சீர்திருத்தப்படாதவை (3) கிராமக் கைத்தொழில்கள் என முவ்வகையாகப் பிரிக்கலாம். சிறு தொழில்கள் யாவும் ஒரு இலக்ஷம் ரூபாய்க்குக் குறைவான மூலதனத்தையுடையன என்று முன்பு கூறப்பட்டது. II-வது அநுபந்தத்தில் கிராமக் கைத்தொழில்களின் ஜாபிதா காணப்படும். எனவே, சிறு தொழில்களை ஆரம்பிக்க விருப்பமுடையோர் இந்த ஜாபிதாவைப் பார்வையிடுமாறு வேண்டப்படுகின்றனர்.

33. நம் நாட்டில் நூற்றுக்கு 93 பேர் கிராமத்தில் வாழ்கின்றனர். நாட்டு முன்னேற்றமும் தொழில் விருத்தியும் இவர்களால்தான் ஆகவேண்டியிருக்கிறது. எனவே முதன்முதலில் கிராமக் கைத்தொழில்களை ஆரம்பிப்பது தான் சிறந்தது. கிராமத்தில் உள்ள செல்வர்கள், கிராமத்தில் கிடைக்கும் மூலப் பொருள்களையும் ஆட்களையும் கொண்டு, சிக்கனமாகத் தொழில்களை நடத்தலாம். கைத்தறி நெசவு முதலியவைகள் இவ்வாறுதான் பல இடங்களில் இப்பொழுதும் நடந்துவருகின்றன. ஆனால் விஞ்ஞான முறையில், நாகரீகமாய், சிறு இயந்திரங்களைக் கொண்டும், இயந்திர விசையால் கிராமத் கைத்தொழில்களை நடத்தி வந்தால் அதிக ஊதியம் உண்டாகி நாட்டு வளமும் அதிகரிக்கும் என்பதில் ஐயமில்லை.

34. பொதுவாக, கிராமக் கைத்தொழில்களை நவீன முறையில் நடத்த

(1) மூலதனம்
(2) தக்க இயந்திரங்கள்; இயந்திர விசை
(3) மூலப் பொருள்கள்
(4) மார்க்கெட்டுகள்; விற்க வசதிகள்

இவைகளைப்பற்றி ஆலோசித்துத் திட்டங்களை ஏற்படுத்த வேண்டும்.

முதல் சிரமம் மூலதனத்தைப் பெறுவது. அதிக வட்டிக்கு வட்டிக் கடைகளில் கடன் வாங்குவது ஏற்காது. வட்டிக் கடைக்காரர்களால் ஏற்படும் துன்பங்கள் அளவிலடங்கா. ஆதலால் அரசாங்கத்தார்களும், கிராமச் சீமான்களும் ஆலோசித்து, கூட்டுறவு நாணயச் சங்கங்களையும், பாங்குகளையும், கூட்டுறவு விற்பனைச் சங்கங்களையும் ஏற்படுத்தி அவைகளின் மூலமாய் தொழிலபிவிருத்திக்குக் கடன் கொடுத்தும், உற்பத்தியாகும் பண்டங்களை விற்பனை செய்தும், கிராமக் கைத்தொழிலை ஆதரித்து விருத்தி செய்ய வேண்டும். இப்படிச் செய்வதால் லேவாதேவி செய்பவரிடமிருந்து தப்ப வழியுண்டு.

கூடியமட்டிலும் பலபேர் சேர்ந்து பங்குத் தொகைகள் போட்டு கம்பெனி முறையில் துவக்குவது சிறந்தது. ஜில்லாக்களிலுள்ள வியாபாரிகள்; தொழிற்பயிற்சி கொண்டவர்கள், சீமான்கள், இவர்கள் ஒன்றுசேர்ந்து, சங்கங்களை நிர்மாணித்து, கிராமத் தொழில்களுக்கு வேண்டிய திட்டங்களை ஏற்படுத்த உதவ வேண்டும். அவ்வப்போது ஏற்படும் பிரச்னைகளையும் அந்த சங்கங்கள் விசாரித்து வேண்டிய போதனைகள் செய்யவேண்டும்.

நிபுணர்களின் உதவியால் அடிக்கடி தொழில் முறைகளைச் சீர்திருத்தி, பண்டங்களை நயப்படுத்தி, தொழிலை இலாபகரமான நிலைமைக்குக் கொண்டுவரவேண்டும். இதனால் பிறதேசப் பொருள்களுடன் தக்க போட்டி போடவும் முடியும்.

(x) வியாபாரத்திற்காகவும், தொழிலபிவிருத்திக்காகவும், சஞ்சாரம் செய்யும் நபர்களுக்குத் தக்க உணவு, தங்குமிட வசதிகளை ஏற்படுத்தவும், அவர்களுக்குத் தேவையான செய்திகளை அடையும்படி செய்யவும் ஏற்பாடு செய்தல்.

(xi) மற்றும் தொழிலபிவிருத்திக்கான இதர எல்லா முயற்சிகளையும் செய்தல்.

46. தொழில் முன்னேற்றத்திற்கும், வியாபார வளர்ச்சிக்கும் வேண்டிய வசதிகள் தற்போது நம் நாட்டில் சீர்குலைந்து கிடக்கின்றன. முக்கியமாய் வர்த்தகர்களுக்குச் சாப்பாடுவிடுதிகள், தங்குமிடங்கள், பாங்குகள், நாணயமாற்று சங்கங்கள், செய்திக் கழகங்கள் இன்னும் மற்ற வசதிகள் தேவை. இவ்வசதிகள் ஆங்காங்கு கிராமங்களிலும்கூட ஏற்படவேண்டும். வசதிகள் அதிகமாக, வர்த்தகர்களின் போக்கு வரத்தும் அதிகப்பட்டு, அதனால் வியாபாரம் செழித்து, அதையொட்டி உற்பத்தித் தொழிலும் உயர் நிலையை அடையும். இந்த வசதிகளை துவக்கத்தில் சிக்கனமாகச் செய்துவந்து, பின் நாட்டுச் செல்வம் வளர வளர அதிக வசதிகளை ஏற்படுத்தலாம். பொருள் சம்பாதிப்பதெல்லாம் தேகசுகத்திற்கும் மனோசுகத்திற்கும் தான். இத்தகைய சுகங்களுக்குத் தக்க வசதிகள் நாட்டில் அதிகப்படியாக ஏற்பட்டால்தான் நாட்டின் செழிமையைக் குறிப்பதாக ஆகும்.

## 8. ஜில்லா கிராமச் சங்கங்கள்.

47. அ. இ. உ. சங்கத்தின் நோக்கங்களை மக்களிடத்துப் பிரசாரம் செய்ய ஜில்லாச் சங்கங்களும், கிராமச் சங்கங்களும் மிகவும் இன்றியமையாதன என்று முன்பே கூறப்பட்டது. அவைகளைப்பற்றி சிறிது விஸ்தாரமாக இங்கு கவனிப்போம்.

48. ஒரு ஜில்லாவிலுள்ள மத்திய சங்கத்து அங்கத்தவர் ஒருவர், தொழிலபிவிருத்தியில் ஈடுபடும் மற்றும் பலருடன் கலந்து, ஊக்கமும், ஆர்வமும் செல்வாக்கும், சொல்வாக்குங்கொண்ட 20 அல்லது 25 நபர்களை ஜில்லாவில் பொருக்கி எடுத்து, ஜில்லாச் சங்கத்தை ஏற்படுத்த வேண்டும். பொதுவாய் ஜில்லாச் சங்கங்களில் 5 முதல் 12 வரை அங்கத்தினர்கள் இருக்கலாம். தங்களுக்குள் நிருவாகத்தை நடத்த, திறமையும், யூகமும் படைத்த மூன்று நபர்களைத் தேர்ந்து எடுத்துக் காரியக்கமிட்டியை அமைக்கவேண்டும். இக்கமிட்டி, தேவையானல் மற்றும் பலரைச் சேர்த்துக் கொள்ளலாம். ஜில்லாச் சங்கத்தின் எல்லா நடவடிக்கைகளையும் காரியக் கமிட்டிதான் செய்யவேண்டும். இக்கமிட்டியின் தலைவர்தான் ஜில்லாச் சங்கத்தின் முக்கிய ஆபீசர். அ. இ. உ. சங்கத்தின் சகல நடவடிக்கைகளையும் அவரைக் கொண்டே நடத்தவேண்டும். ஆனல் இவர் ஜில்லாச் சங்கத்தின் நோக்கத்தையும் அநுசரிக்கவேண்டும். பிரதி வருஷம் புதுக்காரியக் கமிட்டியையும் புதுத் தலைவரையும் நியமனம் செய்துகொள்ளலாம்.

1. ஜில்லாச் சங்கம்
2. காரியக் கமிட்டி
3 தொழிற் கழகம்
4. மூலதனம்

49. தக்க பிரசாரம் செய்ய, மக்களின் உதவி, ஆதரவு, அநுசரணை, மற்ற வசதிகள் இவை தேவையாகும். இச்சகாயங்களின்றி சங்கங்கள் நிலைக்கா. இவ்வசதிகளையடையும் பொருட்டு ஜில்லாப் பிரமுகர்கள் ஜில்லாச் சங்கத்திற்கு அநுசரணையாக தொழிற் கழகங் (Industrial Association) களை அமைக்கவேண்டும். வெவ்வேறு வகையான தொழிலுக்கு வெவ்வேறு தொழிற் கழகத்தை ஏற்படுத்தலாம். அடிக்கடி இக்கழகங்கள் கூடி தத்தமது தொழிலபிவிருத்தி செய்வதுடன் ஜில்லாச் சங்கத்தின் காரியங்களையும் பயன் தரத்தக்கதாகச் செய்யவேண்டும்.

(iii) பல தொழிற் பிரச்னைகளைத் தீர்த்தல்.

(iv) நூதன தொழிற்சாலைகளை யமைக்க ஆலோசனை கூறல்.

(v) ஏற்கனவே இருக்கும் தொழில்களை எவ்விதம் விருத்திசெய்தல் எனக் கவனித்தல்.

(vi) தொழிலபிவிருத்தியால்தான் தேசம் முன்னேற இடமுண்டெனத் தீவிர பிரசாரம் செய்தல். இவை முதலானவைகள்.

38. தேசத்தின் பொதுவான தொழிலபிவிருத்திக்கான ஆலோசனையை மத்திய சங்கம் கொடுத்துதவும். இதர கிளைச்சங்கங்களை ஆங்காங்கு ஏற்படுத்துவதற்கும் அது முயற்சி செய்யும். இடங்களுக்குத் தக்கவாறு என்னென்ன தொழில்களை ஏற்படுத்தினால் எவ்வாறு மக்கள் பயன்பெறுவர் என்று ஆலோசிக்கும் பொறுப்பும் மத்திய சங்கத்தைச் சார்ந்தது. கிளைச் சங்கங்களும், அவ்வப்போது தொழிலபிவிருத்திக்கான யோசனைகளையும் மத்திய சங்கத்திற்குத் தெரியப்படுத்தும். ஆங்காங்கு பல இடங்களிலிருக்கும் வியாபார தந்திரிகளையும், செல்வவான்களையும், நிபுணர்களையும் கொண்டு தொழிற்சாலைகளைப் பெருவாரியாக ஏற்படுத்தும் விஷயத்தில் ஊக்கமளிப்பதே இச்சங்கத்தின் முக்கிய இலக்ஷியமாகும்.

மேலே கூறப்பட்ட நோக்கங்களைச் செயல் முறையில் கொண்டுவர மத்திய சங்கம் மூன்று மாதத்திற்கொரு முறையாவது, அல்லது அதற்கிடைக் காலங்களிலாவது கூட்டப்கூடி பல விஷயங்களுடன்,

(i) நூதன தொழில்களை ஏற்படுத்தும் திட்டங்கள்

(ii) ஏற்கனவே நடந்துவரும் தொழில்களின் அபிவிருத்தி

(iii) மூவ்வகைத் தொழில்களைப்பற்றி பொதுவான ஆலோசனை, இவைகளைக் கவனிக்கும்.

39. இதர நாடுகளில் தொழிலபிவிருத்தி எவ்வாறு செய்யப்படுகிறது? அவைகளில் எழும் பிரச்னைகள் யாவை? எங்ஙனம் அவை தேச நன்மையைக் கருதித் தீர்க்கப்படுகின்றன? அதுபோல நம் நாட்டில் எத்தகைய பிரச்னைகள் எழுகின்றன? அவைகளை எம்முறையில் தீர்ப்பது? என்பதான விஷயங்களை மத்திய சங்கம் கூர்ந்து ஆலோசிக்க வேண்டும். பிரசாரத்திற்காகவும், மக்களின் அறிவு விசாலத்திற்காகவும், ஊக்கமளிப்பதற்காகவும், மத்திய சங்கம் விபரமான புள்ளி விபரங்களைத் திரட்ட, தக்க நிபுணர்களை அமைக்கவேண்டும். நம்நாட்டில் மட்டுமல்ல, உலகிலுள்ள எல்லா நாடுகளிலிருந்தும்,

(i) தொழில்களில் இடப்பட்ட மூலதனம் இன்னதென்றும், மக்களின் நபர் ஒன்றுக்கு மூலதன விழுக்காடு இன்னதென்றும், ஒவ்வொரு வகையான தொழில்களிலும் எவ்வளவெவ்வளவு மூலதனம் என்றும்,

(ii) ஒவ்வொரு தொழில்களிலும், வேலை செய்யும் தொழிலாளர்கள், நிபுணர்கள், கண்காணிப்பாளர்கள் இவர்களின் எண்ணிக்கை, செயல் திறன், சம்பளம், வருமானம், ஓய்வு, அவர்களுக்களிக்கப்பட்ட இதர சவுகரியங்கள், அவர்கள் வாழ்க்கையிலே என்ன என்றும்,

(iii) உற்பத்தி மொத்தங்களையும், நபர் ஒன்றுக்கு இவ்வளவு வருட உற்பத்தி எனவும்,

(iv) தொழில்களில் மொத்த வருமானம், செலவு, இலாபம், நபர் ஒன்றுக்குச்சராசரி வருட வருமானம் இன்னதென்றும் விபரங்களைப் புள்ளிகள் வாயிலாகத் திரட்டவேண்டும்.

40. மத்திய சங்கம், அடிக்கடி புள்ளி விபரங்களைத் தயாரிப்பதுடன், தேற்சி பெற்ற முதலாளிகள், வியாபாரிகள், நிபுணர்கள், கல்லூரிப் புலவர்கள், ஆராய்ச்சியாளர்கள், இவர்களுடன் கலந்து, ஆராய்ந்து, நாட்டிலுள்ள மூலதனத்தை எவ்விதம் பயன்படுத்துவது மூலப் பொருள்களை எவ்வாறு சேகரிப்பது, தொழிலாளர்களை எவ்விதம் பயிற்றுவது, என்ற இவைபோன்ற விஷயங்களில் தக்க திட்டங்களை ஏற்படுத்த வேண்டும். இப்போது இருக்கப்பட்ட கல்வித்திட்டங்களைக் கூர்ந்து கவனித்து, தொழிலபிவிருத்திக்கான விஞ்ஞானக் கல்வி, தொழிற்கல்வி, வியாபாரக்கல்வி, தொழிற்பயிற்சி முதலியவைகளைப் பெருவாரியாக போதிப்பதில் தக்க முறைகளை ஏற்படுத்த ஆலோசனை கூறவேண்டும். மற்றும், தொழில்மேன்மையானது உற்பத்திப்பொருள் நயத்தைப்பொருத்திருப்பதால், பண்டங்களின் நயத்தை விருத்திசெய்யவும், சிக்கனத்தை ஏற்படுத்தவும், வருவாயை அதிகப்படுத்தவும், தக்க ஆராய்ச்சிச் சாலைகளை ஏற்படுத்தவும் ஆலோசனை கூறவேண்டும். அல்லாமலும், உற்பத்தி செய்யப்பட்ட பண்டங்களை விற்கப் போதிய மார்க்கெட்டுகளை ஏற்படுத்தவும், பிரசுரம் செய்வதற்குத் தக்க முயற்சியளிக்கவும் ஆலோசனை கூறவேண்டும்.

மேற்கூறியவாறு பல துறைகளில் மத்திய சங்கம் உழைத்து, ஆலோசித்து, திட்டங்களை வகுத்துக் காட்டினல் போர்த் தேவைகளையும், அதற்குப்பின் ஏற்படும் சமாதான காலத் தேவைகளையும், நாம் நம் நாட்டிலேயே பெருவாரியாகவும் சிக்கனமாகவும் செய்ய இயலும். இதனல் நாடும் மிக்க செல்வாக்கை யடைய ஏதுவாகும்.

41. ஒவ்வொரு வருட முடிவிலும், மத்திய சங்கம் எவ்வளவு வேலைகளைச் செய்திருக்கிறது, நாட்டிற்கு எவ்வாறு சேவை செய்திருக்கிறது, நாட்டின் செல்வாக்கு எவ்வளவு படி உயர்ந்திருக்கிறது என்று அறியவும், புது வருடத்தில் என்னென்ன திட்டங்களைக் கைக்கொள்ள வேண்டுமென்று ஆலோசித்துத் தீர்மானிக்கவும், மார்ச்சு மாதத்தில் பம்பாய் அல்லது இதர ஏதாவது ஒரு முக்கிய நகரத்தில் சங்கத்தின் ஆண்டு விழா நடத்தப்படவேண்டும். இச்சங்கம் ஏற்பட்டதிலிருந்து 1941, 1942, 1943 ஆண்டுகளில் மூன்று ஆண்டுவிழாக்கள் நடைபெற்றுள்ளன. இச்சங்கத்தின் அவசியமும் அது நடத்தும் அரிய செயல்களும் ஆண்டுவிழா நடவடிக்கைகளினின்றும் விசதமாக அறியலாம். தேச நலத்தை விரும்பும் ஒவ்வொருவனும் அவைகளைப் படித்து அறியுமாறு கோரப்படுகிறது.

## 7. மாகாணச்சார்பு சங்கங்கள்.

42. நம் நாட்டுத் தொழில் முறைகள் மிக்க பின்னேக்காகவும் சீர்கேடாகவும் இருக்கின்றன என்று முன்னத்தியாயங்களினின்று யாவரும் எளிதில் உணரலாம். தொழிலபிவிருத்தி ஏற்பட வேண்டுமாயின், மக்களின் வாழ்க்கை நிலை உயரவேண்டுமாயின், நாட்டு வளப்பம் பெருகவேண்டுமாயின், பெருவாரியான அளவில் தொழிற்சாலைகளை இடங்களுக்குத் தக்கவாறு ஏற்படுத்தவேண்டும்; ஜனங்கள் நாகரிக - சமூக - ஒழுங்கிற்குக் கட்டுப்படல் வேண்டும்; செயல் திறமையை வளர்த்துக் கொள்ள வேண்டும். இத்தகைய நாட்டுச் சீர்திருத்தங்களில் மாகாணச் சங்கங்களின் உதவி மிக்க அவசியமாக ஏற்பட இடமுண்டு. மத்திய சங்கம் எவ்வாறு அவசியமோ, அவ்வாறே மாகாணச் சங்கங்களும் இன்றியமையாதனவாகும். இந்நோக்கங்களைக்கொண்டு 5 வகையான சங்கங்களை நிர்மாணிக்கலாம்.

## மாகாணச்சார்பு சங்கங்கள்

(i) மாகாணச்சங்கங்கள் அல்லது ஸமஸ்தானச் சங்கங்கள் :— இவைகள் முறையே மாகாணத் தலைநகர்களிலாவது, சுதேச மன்னர்களின் தலை நகர்களிலாவது அமைக்கப்பட வேண்டுவன.

(ii) ஜில்லாச் சங்கங்கள் :— இவை ஜில்லாவின் தலை நகர்களில் ஏற்படுத்தப்படுவன.

(iii) கிராமச் சங்கங்கள் :— ஏதாவது ஒரு முக்கிய கிராமத்தை மையமாகவுடைய பல கிராமங் களின் நன்மையைக்கோரி ஏற்படுத்தப்படுவன.

(iv) நகரச் சங்கங்கள் :— பெரிய நகரங்களில் தனிப் பட்ட முறையில் ஏற்படுத்தப்படுவன.

(v) விசேஷ சங்கங்கள் :— மேற்கூறிய நான்கு வகைச் சங்கங்களுக்கும் உதவியாக அ. இ. உ. சங்கத் தின் அநுமதியின்பேரில் ஏற்படுத்தப்படுவன.

மேற்கூறிய எல்லாச் சங்கங்களிலும் ஜில்லாச் சங்கங் களின் பொருப்பும் ஆவசியகமும் அதிகம். ஏனெனில் அரசாங்கத்திற்கே ஜில்லாக்கள்தான் ஆதாரமாக இருக் கின்றன. ஆதலால், முதலில் ஜில்லாக்களிலுள்ளவர்களில் முகாமியாக இருப்பவர்களைப் பொருக்கி எடுக்கவேண்டும். அவர்கள் தலைமையின் கீழ், ஆலோசனைசெய்து, கூட்டுறவு முறையில் தக்க தொழிற்சாலைகளை ஏற்படுத்த முயற்சிக்க வேண்டும். பரிசோதனைக்காக ஏதாவது வசதியான ஒரு ஜில்லாவில் இதுபோன்ற சங்கத்தை ஏற்படுத்தி அதன் வாயிலாகத் தொழிலபிவிருத்தியை உண்டாக்கினால், இந்தி யாவிலுள்ள மற்ற 231 ஜில்லாக்களுக்கும் அது ஒரு சிறந்த எடுத்துக் காட்டாக இருக்கும்.

43. 5,000 – 12,000 வரை ஜனத்தொகை கொண்ட பல கிராமங்களை ஒன்றுசேர்த்து அந்த கிராமங்களின் முன்

னேற்றத்திற்காக தக்க தொழிலபிவிருத்தி செய்ய கிராமச் சங்கங்கள் நிறுவப்படவேண்டியது மிக மிக அவசியம். ஜில்லாச் சங்கங்களின் பராமரிப்பின் கீழ் இக்கிராமச் சங்கங்கள் அலுவல்களை மேற்கொள்ளுவது நலம். மாகாணச் சங்கம், அதற்குட்பட்ட ஜில்லாச் சங்கங்கள், நகர்ச் சங்கங்கள் இவைகளின் அலுவல்களை ஒழுங்கு படுத்தும். எல்லாவற்றிற்கும் தலையாக பல மாகாணங்களிலுள்ள பிரமுகர்களைக் கொண்ட மத்திய சங்கம், மற்ற எல்லாச் சங்கங்களையும் மேற்பார்த்து அவைகளுக்குத் தேவையான திட்டங்களை ஏற்படுத்தி உதவும். அகில இந்திய உற்பத்தியாளர் சங்கத்தின் இலக்ஷியங்களை நிறைவேற்றி வைப்பதில் மத்திய சங்கம் இவ்வாறு பல சங்கங்களின் மூலமாய் முயன்றுவரும்.

நம் நாட்டு அரசாங்கத்தின் உதவியதிகமாகக் கிடைக்கும் வரை, எல்லாத் தொழில் முயற்சிகளும் மக்களின் ஊக்கத்தாலேயே ஏற்பட வேண்டியிருக்கிறது. இங்கிலாந்தில் உள்ளது போன்று நம் நாட்டுத் தொழில்களுக்குத் தேவையான பண உதவி, காப்புவரி, சலுகைகள், ஆதரவு இவையாவும் அரசாங்கத்தாரிடமிருந்து மக்களால் எதிர்பார்க்கப்படுகிறது. இவ்வகையில் அரசாங்க ஆதரவு அதிகமாக ஏற்படின் நாட்டு மக்களின் செல்வம் மட்டுமல்ல, அரசாங்கத்தின் வருவாயும் அதிகரிக்கும். அரசாங்க உதவி கிடைக்காவிட்டால் நாம் வாளாவிருப்பதில் யாது பயனுமில்லை; நாட்டிலுள்ள செல்வர்களும், முதலாளிகளும் ஊக்கமுடையவர்களும், வியாபாரிகளும், நிபுணர்களும், கற்றவர்களும், தேசநலத்தைக்கருதி முன்னுக்கு வந்து, தொழிலபிவிருத்திக்கான சங்கங்களை ஏற்படுத்தி அதன் மூலம் தொழில் நிலையங்களை ஸ்தாபிக்கத் தக்க முயற்சி செய்யவேண்டும். தொழிலபிவிருத்திக்கு இது ஓர் அரிய சந்தர்ப்பம். தலைவர்கள் முன்னுக்கு வராமல், ஒத்துழைக்காமல் சோம்பி யிருந்தால் கிடைத்த சந்தர்ப்பத்தைக்

கைசோர விட்டுப்பின் தேம்பித்திரிவர்; நாட்டையும் வறுமையில் அதிகப்படியாக அழுத்திய குற்றத்திற்கும் ஆளாவார்கள் என்பதில் ஐயமில்லை.

மாகாணங்களில் ஏற்கனவே தொழிலபிவிருத்திச் சங்கங்கள் ஏற்பட்டு இருந்தால், அவைகளைக் கூடியமட்டும் மத்திய சங்கத்துடன் பிணைத்துவிடவேண்டும். அல்லது மத்திய சங்கத்தின் நோக்கத்திற்கு இணங்கிச் செயல் புரிய வேண்டும். கூடியமட்டும் பஞ்சாயத்து போர்டு, முனிசிபாலிடி, ஜில்லாபோர்டு, சர்க்கார் தொழில் இலாகா, விவசாய இலாகா முதலியவைகளுடன் ஒத்துழைக்கவேண்டும்; அவைகளின் உதவிகளையும் நாடவேண்டும்.

44. மாகாணச்சங்கம் முதலிய சார்புச் சங்கங்கள், பொதுஸ்தாபன அங்கத்தினர்கள், பிரமுகர்கள், செல்வாக்கும் சாமார்த்தியமும் கொண்டவர்கள், நிபுணர்கள், தேசப்பணிசெய்யும் அவாவுள்ளவர்கள், தியாகிகள், தொண்டர்கள் இவர்களின் உதவிகளையும் ஆதரவுகளை நாடமுயலுவது அத்தியாவசியம்.

45. சார்புச் சங்கங்களின் முக்கிய கடமைகளையும் அலுவல்களையும பின்வருமாறு வகுத்துக் காட்டலாம்.

(i) நூதனத் தொழில்களை உண்டாக்குவதிலும், ஏற்கனவே இருக்கும் தொழில்களைச் சீர்திருத்தம் செய்வதிலும் கண்ணுங் கருத்துமாக இருத்தல்.

(ii) தொழிலபிவிருத்திக்கான அறிவு, மூலதனம், மூலப்பொருள், கூலி எவ்வாறு அடையக் கூடும் என்று ஆலோசித்தல்.

(iii) வெளியூர்களில் சிறப்பாக நடக்கும் தொழில்களின் கிளைகளை ஏற்படுத்தவும், அவைகளை

இலாபகரமாவும் நடத்தத் திட்டங்களை ஏற்படுத்தல்.

(iv) இயற்கையில் ஆங்காங்கு மூலப்பொருள்கள் கிடைக்கும் வசதிகளையும், அவைகளைச் சிக்கனமாக அடையும் முறைகளையும் பற்றி ஆலோசித்தல்; தக்க புள்ளிவிவரங்களைத் திரட்டுதல்.

(v) மேலே கிடைத்த புள்ளி விவரங்களையும் இதர விஷயங்களையுங்கொண்டு, நூதன தொழில்களை விரைவாக ஏற்படுத்தவும், ஏற்கனவே நடந்துவரும் தொழில்களை மேற்கொண்டு விருத்தி செய்யவும் தக்க திட்டங்களை ஏற்படுத்துதல்.

(vi) அரசாங்கத்தின் தொழிலபிவிருத்தி நோக்கங்களை மக்களுக்கு எடுத்துச் சொல்லுவதும், ஜனங்களின் குறைகளையும், தேவைகளையும் அரசாங்கத்தாருக்கு எடுத்துச் சொல்லுவதும்.

(vii) தொழில் முறையில் ஏற்படும் சிக்கல்களைப் பிரிக்கவும், சச்சரவுகளைத் தீர்க்கவும் உதவி செய்தல்.

(viii) கண்காக்ஷி,பொருட்காக்ஷி, துண்டுபிரசுரங்கள் விளம்பரங்கள், மேடைப்பேச்சு முதலியவைகளால் சுதேசத் தொழிலபிவிருத்திக்கும் வியாபார அபிவிருத்திக்கும் முயற்சிகள் செய்தல்.

(ix) தொழிலபிவிருத்திக்கான முறைகளைக் கண்டுபிடிக்க, நிபுணர்களையும், விஞ்ஞானிகளையுங் கொண்டு ஆராய்ச்சிகள், சோதனைகள் முதலியவைகளைச் செய்வித்தல்.

35. தனிப்பட்ட நபருக்கு இனி காலமில்லை. சேர்ந்து வாழ்வதே சிறந்த வலிமை. கிராமக் கூட்டுறவே கிராம முன்னேற்றத்திற்கு அடிப்படை. பலபேர் சேர்ந்து தொழில் செய்வதால் தந்நலம் குறைந்து தேசநலம் பெருக இடமுண்டாகும்.

தேச நலத்திற்கு அடிகோலியாக இருப்பது கிராமச் சங்கங்கள். அவைகள் மூலமாய்த் தத்தமது இடங்களுக்குச் சவுகரியமான பல தொழில்களை ஏற்படுத்த ஏற்பாடுகள் செய்யவேண்டும். இதில் பொறாமைக்கும், சச்சரவுகளுக்கும், மன வேற்றுமைக்கும் இடம் கொடுக்கக் கூடாது. சுயநலம் தேச நலத்திற்காகத் திருப்பப்பட வேண்டும். இதற்குக் கிராமங்களில் கல்வி வேகமாய்ப் பரவும்படி செய்வதுதான் முறை. கிராம மாந்தர்களுக்குத் தேச நல உணர்ச்சியை உண்டாக்கி அதன்மூலம் பொருளாதார நிலையை உயர்த்தவேண்டும்.

36. பல மாகாணங்களில் தொழில் இலாகாக்கள் கிராமத் தொழிலபிவிருத்தியில் சிரத்தை காண்பிக்கின்றன. இது போதிய அளவிற்கு மிகக் குறைவாக இருக்கிறது. அ. இ. உ. சங்கம் இவ்விஷயத்தில் முயற்சிசெய்ய முயன்று வருகிறது. சீரான தொழில்களை எவ்விதம் ஏற்படுத்துவது, அவைகளுக்கு ஒழுங்கான திட்டங்கள் எவ்வாறு அமைப்பது, புள்ளி விவரங்கள் எவ்விதம் தயாரிப்பது, அதனின்று மேன்மேலும் தொழில் விருத்திக்கு எப்படி முயற்சிப்பது என்னும் ஊக்கமே நம்மவருக்கு இல்லாதிருப்பது வருந்தத்தக்கது.

## 6. தொழில் ஊக்கத்திற்கு அகில இந்திய மத்திய சங்கம்.

37. நம் நாட்டிலுள்ள உற்பத்தித் தொழில்களுக்கு உற்சாகமும், ஊக்கமும், உதவியும் அளிக்கும் பொருட்டும்

எல்லாத் தொழில்களுக்கும் பொதுவான உதவிச் சங்கமாக இருக்கும்பொருட்டும், 1941-ம் ஆண்டு, பம்பாயில் இந்தியத் தொழிலபிவிருத்தி சங்கத்தார், அகில இந்திய உற்பத்தியாளர் மகாநாடு ஒன்றைக் கூட்டினர். கூட்டுறவு முறையால் நம் நாட்டில் விரைவாகத் தொழிலபிவிருத்தி செய்யப் பல பொதுவான திட்டங்களைத் தலைவர் தம் முன்னுரையில் வகுத்துக் காண்பித்தார். உற்பத்தியாளர்களுக்காக ஒரு சங்கம் ஏற்படுத்தப்பட வேண்டுமென்றும், அதற்குப் போதிய திட்டங்கள் அமைக்கப்பட வேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டன. அதன்படி அகில இந்திய உற்பத்தியாளர் சங்கம் (அ. இ. உ. சங்கம்) ஸ்தாபிக்கப்பட்டது.

இச்சங்கத்தின் முக்கிய நோக்கம், முதன்முதலில் பம்பாயில் ஒரு மத்திய சங்கத்தையும், மற்றும், இடங்களின் தேவைகளை யநுசரித்து கிராமக் கூட்டுச் சங்கம், ஜில்லாச் சங்கம், மாகாணச் சங்கம் இவைகளையும் நாட்டில் எல்லா இடங்களிலும் ஏற்படுத்துவதுதான். இப்போது பம்பாயில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் மத்தியக் கமிட்டியில் நாட்டின் பல தொழிற் பிரமுகர்களும், வியாபார நிபுணர்களும் அங்கத்தினர்களாகவிருக்கின்றனர். மற்ற கிளைச் சங்கங்களின் அலுவல்களை மேற்பார்வை செய்வதற்கும், திட்டங்களை அமைப்பதற்கும், சங்கத்தின் நிரந்தர நோக்கங்களைப் பரவச் செய்வதற்கும் மத்திய சங்கத்திற்குப் பூரண அதிகாரம் உண்டு. மத்தியக் கமிட்டியில் ஒரு காரியக் கமிட்டியும், மூன்றுவிசேஷக் கமிட்டிகளும் இருக்கின்றன. இவைகளின் நோக்கங்கள்

(i) வியாபாரிகளுடையவும், தொழில் அபிமானிகளுடையவும் திறமைகளை நாட்டு க்ஷேமத்திற்காகப் பயன்படுத்த ஆலோசித்தல்.

(ii) தொழிலாளிகளின் செயல் திறமைகளைப் பெருக்க திட்டங்கள் வகுத்தல்.

பொதுஜனங்களிடமிருந்தும், செல்வவான்களிடமிருந்தும், நன்கொடையாகவும், தொழில் நடத்திவரும் முதலாளிகளிடமிருந்தும் தொழில் வருவாயிக்குத் தக்கவாறு தொகை வசூல் செய்தும் மூலதனத்தைச் சேகரிக்கவேண்டும்.

50. ஆறு மாதங்களுக்கு ஒரு முறையாவது அல்லது அதற்குக் குறுகிய காலத்திலாவது ஜில்லாச் சங்கமும், தொழிற்கழகமும் கூட்டங்கூடி, ஏற்கனவே நடந்துவரும் தொழில்களை எவ்விதம் விருத்தி செய்வது, நூதன தொழில்களை எவ்வகையில் ஏற்படுத்துவது, என்பதுபற்றி ஆலோசிக்க வேண்டும். தொழிலில் வேலைபார்த்துவரும் சிப்பந்திகளையும், தொழிலாளிகளையும் உற்சாகப்படுத்தித் தத்தமது செயல் திறனை அதிகப்படுத்துவது சங்கத்தின் கடமையாகும். ஜில்லாவிலுள்ள ஒவ்வொரு மனிதனும் தொழிலபிவிருத்தியில் ஏதாவது ஒரு அம்சத்தில் ஈடுபடுபவனாகவும், இயந்திர மனப்போக்குள்ளவனாகவும் (Machine-minded) ஆவதற்கு ஜில்லாச் சங்கத்தின் முயற்சிதான் முக்கிய காரணம். "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்; பழுதுண்டு வேறோர் பணிக்கு" என்னும் பழய எண்ணத்தை மாற்றி "உற்பத்தித் தொழிலே உயர்விற்குக் காரணம்" "இயந்திரத் தொழிலே இந்தியர் உய்விற்கு அடிப்படை", "ஆலைத் தொழிலே சாலவும் நன்று", "தொழில் செய்து வாழ்வாரே வாழ்வார்; பழுதுண்டு வேறோர் பணிக்கு" என்னும் தற்கால உண்மைகளை மக்களின் இரத்தத்தில் ஊடுருவும்படி செய்வது ஜில்லாச் சங்கத்தின் முக்கிய அலுவல்களிலொன்று. பிற நாடுகள் எவ்வாறு மேன்மையை யடைந்திருக்கின்றன; நம் நாடு என் கீழ் நோக்கிச் செல்கிறது என்றும், நாமும் எவ்வாறு மேன்மையை யடையலாம் என்னும் உண்மையையும் புள்ளி விபரங்களைக்கொண்டு ஜனங்களுக்கு எடுத்துக்காட்டி மக்களிடம் தீராத ஆவலை உண்டாக்கவேண்டும்.

51. இங்கு குறித்திருக்கும் வசதிகளையெல்லாம் அரசாங்கத்தார் ஏற்படுத்திக் கொடுக்கும்படி ஜில்லாச் சங்கங்கள் தக்க முயற்சிகளைச் செய்யவேண்டும். இந்த வசதிகள் தேச முன்னேற்றத்திற்கு அத்தியாவசியம் என்னும் விஷயத்தை ஜனங்கள் அறியும்படி ஜனங்களைத் தூண்டவேண்டும். இவ்வசதிகள் ஏற்பட்டால்தான் தொழிலபிவிருத்தி ஏற்படும். இவைகளைப்பற்றி ஜில்லாச் சங்கங்கள் இடைவிடாது அரசாங்கத்தாரிடம் வற்புறுத்தி எண்ணிய கருமத்தை முடித்தல் வேண்டும்.

1. காப்புவரிகள்
2. புள்ளி விபரங்கள்
3. பாங்கு வசதிகள்
4. தொழிற் கல்வி
   வியாபாரக் கல்வி
   தொழிற் பயிற்சி
5. சாப்பாடு வசதி
   பிரயாண வசதி
   தங்கும் வசதி

52. சுதேசத் தொழில்களை ஏற்படுத்துவதில் பெருந் தடை, பிற தேசப் போட்டியே. இப்போட்டி பலவகைகளில் நம் நாட்டுத் தொழிலை அமுக்கப்பார்க்கும். சுதேசத் தொழில்களுக்கு இப்போதும் அரசாங்கம் பாதுகாப்பு அளித்துக்கொண்டுதானிருக்கின்றனர். ஆனால் அது போதாது. காப்பு வரிகள் மூலம் (Protective tax) பிற தேசப் பொருள்களின் இறக்குமதிகளுக்கு வரி அதிக அளவில் விதிக்கப்படவேண்டும். ஜில்லாக்களுக்குத் தேவையான எவ்வெப்பண்டங்கள் பிறநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படுகின்றன? அவைகளின் அளவு யாது? அவைகளை உள்நாட்டிலேயே எவ்வாறு எவ்வகையில் எங்கு செய்யலாம்? என்றும் விஷயங்களைத் தீர ஆலோசித்து, சட்டசபை, அரசாங்க நிருவாக இலாகா, இவைகளுக்கு எடுத்துக்கூறி எவ்வாறு உள்நாட்டுத் தொழில்களுக்குப் பாதுகாப்பு கொடுக்க இயலும் என்றும் ஆலோசனைகள்கூறி நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளவேண்டும். தேசத்தொழில் நிர்மாணத்தில் பிறநாட்டுப் போட்டியினின்றும் காப்பு மிக மிக அவசியம்.

53. பிறநாடுகள் ஒவ்வொன்றிலும் உழுதுண்டு வாழ்பவர் எவ்வளவுபேர்? தொழில் செய்து வாழ்பவர் எவ்வளவு பேர்? தொழிலுற்பத்தி மொத்தம், விவசாய உற்பத்தி மொத்தம், வேலையில்லாமல் அவதிப்படுவோர் எவ்வளவு பேர்? வாழ்க்கை நிலை எவ்வாறு? ஜனங்களின் ஒவ்வொரு நாளைய சராசரி வருவாய் என்ன? என்று அறியப் போதிய புள்ளி விவரங்கள் இப்போது கிடையாது. மேற்கூறிய விஷயங்களைக் குறித்துப் புள்ளி விபரங்களைத் தருவிப்பது ஜில்லாச் சங்கத்தின் மற்ெருரு முக்கிய கடமையாகும். புள்ளி விபரங்களைத் திரட்டும் விஷயத்தில் அரசாங்கம் அசிரத்தையாகவேயிருக்கிறது. ஆகையால் மக்களே இச்சங்கங்களின் மூலம் உள்நாட்டைப்பொருத்து புள்ளிகளைத் தயாரிப்பது அவசியமாகும். இது முதலில் கவனிக்கப்பட வேண்டிய அம்சம், இதுபோன்ற உள்நாட்டுப் புள்ளி விபரங்களைத் திரட்டும் விஷயத்தில் கிராமச் சங்கங்கள் ஒத்துழைக்கவேண்டும். எனவே, பல கிராமங்களை ஒன்று சேர்த்து அவைகளின் முன்னேற்றத்திற்காக கிராமச் சங்கங்களை நிர்மாணித்து ஜில்லாச் சங்கங்களின் அலுவல்களை அவ்வக் கிராமங்களில் பார்க்கும்படி செய்வது முக்கியம். புள்ளி விபரங்களைத் திரட்டுவது முதலில் சிறிது கடினமாக இருப்பினும் நாளடைவில் இது எளிதில் கைகூடும். இதனால் ஒரு ஜில்லாவைப் பொருத்து, தொழில் சம்பந்தமான சகல வகையான செய்திகளும் கிடைக்கக் கூடியதாக ஆகும்.

54. மற்றும் அரசாங்கப் பொருப்பின் பேரில் பாங்குகள் ஆங்காங்கு கிராமங்களிலுங்கூட ஏற்படவேண்டும். பாங்குகள்தான் நாட்டிற்கு முதுகெலும்புபோலிருக்கக் கூடியன. அப்பொழுதுதான் தேவையான மூலதனம் கிடைக்கக்கூடியதாக ஆகும். கூட்டுறவு நாணயச்சங்கங்களையும் ஏற்படுத்தலாம். முக்கியமாய் உற்பத்திப் பொருள்களின் ஈட்டின்பேரிலாவது குறைந்த வட்டிக்குத் தேவை

யான அளவிற்கு பணவசதி கிடைக்க வேண்டியது மிக அவசியம்.

55. இளைஞர்களுக்கு விஞ்ஞானக்கல்வி, தொழிற் கல்வி, வியாபாரக்கல்வி, விசேஷப்பயிற்சி இவைகளைப் புகட்டத்தக்க கல்வித்திட்டங்களை ஏற்படுத்துவது இன்றி யமையாதது. ஜில்லாச் சங்கங்கள் இவ்விஷயத்தில் அதிக ஊக்கத்தைக் காட்டவேண்டும். அரசாங்க உதவியாலும், பொதுஜன ஆதரவாலும் இத்தகைய பயிற்சிக்குகந்த கல்விக் கழகங்களை சுலபமாக ஏற்படுத்தலாம். ஏற்கனவே வேலைபார்த்துவரும் ஆலைச்சிப்பந்திகள், தொழிலாளர்கள் இவர்களின் வேலைத்திறனை அதிகரிக்கச் சாயங்காலப் பள்ளிகளையும், இராப்பள்ளிகளையும் ஏற்படுத்த வேண்டியதும் மிக முக்கியமானது.

56. ஜாதிக்கட்டுப்பாடு, மதக்கட்டுப்பாடு இவைகளால் இப்போது வியாபார சம்பந்தப்பட்ட பிரயாணிகளுக்கு கிராமாந்திரங்களில் போதிய உணவு வசதிகளும், இருப்பு வசதிகளும் கிடைப்பதில்லை. கிராமங்களிலுங்கூட தக்க உணவு, உறைவிட வசதிகள் இவைகளை ஏற்படுத்துவது ஜில்லாச் சங்கத்தின் மற்றொரு கடமையாகும்.

இதுபோன்று கிராமாந்திரங்களுக்குச் சவுகரியமாயும் குறைந்த கால அளவிலும் சிக்கனமாகவும் சென்றுவரத் தக்க போக்கு வரவு சாதனங்களை ஏற்படுத்தும் விஷயத்திலும் ஜில்லாச் சங்கங்கள் முயன்று வரவேண்டும்.

57. மேனாட்டுத் தொழில் முறைகள் போன்று ஒவ்வொரு இந்தியனும், காலத்தின் மதிப்பு, ஒத்துழைப்பின் பலன், கொடுக்கல் வாங்கலில் நாணயம், வேலையில் சுறுசுறுப்பு, நவீன முறையில் உற்பத்தி செய்வதில் விருப்பம், கல்விப்பயிற்சி,இவைகளில் தீராத அவா,இவைகளைப்பழகும் படி செய்வது ஜில்லாச் சங்கத்தின் சீரிய கடமையாகும். நாளுக்குநாள், மாதத்திற்கு மாதம், வருடத்திற்கு வருடம் நாட்டில் உற்பத்தியின் அளவைப் பெருக்கும்படி ஜனங்

களைத் தூண்டவேண்டும். இதற்காகத்துண்டுப்பிரசுரங்கள், விளம்பரங்கள், அறிக்கைகள், பத்திரிகைகள், மேடைப் பிரசங்கங்கள், கண்காட்சிகள், ஒவ்வொருவரையும் தனித் தனியாகக்கண்டு வேண்டுதல் முதலான பல வாயிலாக ஜனங்களின் தொழிலுணர்ச்சியையும் இயந்திரத்தில் மனப் பான்மையையும் எழும்படி கிளரவேண்டும். "எழுமின்! விழிமின்! கருதிய கருமம் கைகூடும்வரை உழைமின்! உழை மின்!!" என்னும் வேதவாக்கை வாழ்க்கையில் கைக் கொள்ளும்படி ஜனங்களைத் தூண்டவேண்டும். பழம் பழக்கத்திலேயே இருந்து வரும் நாம் புதுப்பழக்கத்தையும் நவீன மனப்பான்மையையும் கொள்ளும் விஷயத்தில் பெரிதும் அசிரத்தை காட்டிவருகிறோம், ஊருடன் ஒத்து வாழ்வதன்றி, பிறநாடுகளுடன் ஒத்துவாழவேண்டிய கால மிது. நம் உறக்கத்தினின்றும் எழவேண்டிய காலம் வந்துவிட்டது. இப்பொழுதே நாம் பழைமையானதும் பிற்போக்கானதுமான பழக்கங்களையும், மனப்பான்மை களையும் உதரி எறிந்துவிட்டு, நவீன மனப்பான்மையைக் கைக்கொண்டு, நூதன விஞ்ஞான உற்பத்திமுறைகளை அநுசரித்து தேச சேவைக்காக நாட்டுச்செழிப்பை அபி விருத்தி செய்யும் பணியில் நாம் உடனே நம்மை அர்ப் பணம் செய்யவேண்டும். இவ்விதம் நாம் தீவிர முயற்சி செய்துவந்தால் இன்று முதல் பத்து வருடகாலத்திற்குள் பிறநாடுகளுடன் போட்டிபோட முன்னணிக்கு வந்துவிட லாம். நம் கையே நமக்குதவி. பிறநாட்டார் உதவியை நாம் எதிர்பார்ப்பது தவறு. முயற்சி திருவினையாக்கும் என்ற திடமான நம்பிக்கையுடன் முயன்றுவர வேண்டும்.

மேற்கூறிய முறைகளில் ஜில்லா, கிராமச் சங்கங்கள் முயன்று வந்தால், மக்களிடம் ஒற்றுமை, பணிவு, செயல் திறமை, அறிவு, பொருளீட்டலில் ஆர்வம் இவை பெருகி அதன் வாயிலாக நாட்டின் செல்வமும் வளப்பமும் அதிகமா கும். பொருளாதார நிலையும், வாழ்க்கை நிலையும் உயர்வதால்

ஜனங்களிடம் களிப்பும், கண்ணியமும், தேச சேவை செய்தோம், நாடுமுன்னேறுகிறது என்ற தற்பெருமையும் உண்டாகும்.

இனி, மேற்கொண்டு செய்யக்கூடிய முக்கிய அலுவல்களில் முதற்படியாக அடியில் குறிப்பிட்டபடி செய்திகளைச் சேகரிக்க வேண்டும் :—

(i) நகரம் அல்லது கிராமத் தொகுதிகளின் பெயர்.

(ii) இப்பொழுது இருக்கப்பட்ட தொழில்களின் எண்ணிக்கை, விபரங்கள்.

(iii) அவைகளால் உற்பத்தி செய்யப்படும் பொருள்களின் மதிப்பு (வருடத்திற்கு.)

(iv) சிப்பந்திகள், தொழிலாளிகள் இவ்வளவு என்பது.

(v) அவர்களுடைய சம்பளம், கூலி, நன்கொடை வருவாய் எவ்வளவு (வருடத்திற்கு)

(vi) தொழிலில் முதலாளிகளின் வருவாய் எவ்வளவு (வருடத்திற்கு)

(vii) மூலப்பொருள்கள் அகப்படும் இடம், அளவு, அவைகளை எவ்வாறு பயன் படுத்துகிறார்கள் என்னும் விஷயங்கள்.

58. கிராமத் தொகுதிகளுக்குச் சங்கங்கள் ஏற்படுத்தும் விஷயமாய் அ. இ. உ. சங்கத்தில் ஆராய்ந்ததில்,

கிராமத்திய சராசரி ஜனத்தொகை 450 என்றும், 85 குடும்பங்கள் இருக்கின்றன என்றும், கணக்கிடப்பட்டது. இச் சிறிய ஜனத்தொகை கொண்ட ஒரு கிராமத்திற்குத் தனியாக ஒரு சங்கம் ஏற்படுத்துவது கூடாத காரியம். ஆதலால் 10 அல்லது 12 கிராமங்களை ஒன்ருகத் தொகுத்து அவைகளில் பிரதானமான ஒரு கிராமத்தில் சங்கத்தை ஏற்படுத்துவதுதான் சிறந்தது. இக்கிராமச் சங்கம் அந்த கிராமத்தொகுதிகளைப் பொருத்த எல்லாப் புள்ளி விவரங்களைத் திரட்டுவதிலோ, பிரசாரம் செய்வதிலோ ஜில்லாச் சங்கத்துடன் ஒத்துழைக்க வேண்டும். இம்மாதிரிச் சங்கங்கள் நிறுவப்பெற்று, தம் அலுவல்களை நன்கு கவனித்து வந்தால் அவைகளால் எத்தகைய மாபெரும் பணியாற்றப் படும் என்று அநுபவத்தில்செய்து பார்த்தால்தான் விசதப் படும்.

## 9. முந்நோக்க சீர்திருத்தங்கள், திட்டங்கள் இவைகளின் அவசியம்.

59. நம் நாட்டில் நாம் தலைமுறை தத்துவமாக ஒரே ரீதியில் வாழ்ந்து வருவதில் நம் பழக்க வழக்கங்களிலும், மனப்பான்மைகளிலும் சில கெடுதலான அம்சங்கள் உட் புகுந்திருக்கின்றன. அவைகளில் பல நூற்ருண்டுகளாக வேரூன்றிய சிலவற்றை நீக்குவது சாதாரணமாக முடியாதுதான். ஆனல், பல ஆண்டுகளாகத் தக்க கல்விச் சீர்திருத்தங்களாலும், கடுமையான பிரசாரத்தாலும், நூதன திட்டங்களாலும், சட்டங்களாலுமே அவைகளைப் போக்க வேண்டும். நம் சமூகத்தில், நம் முன்னேற்றத்திற்கும், நம் தொழில்வளர்ச்சிக்கும், நம் நாட்டின் செழிப்பிற்கும் இடைஞ்சலாக இப்பொழுதும் பல அம்சங்கள் இல்லாமலில்லை. இவற்றைத் தக்க சட்டதிட்டங்கள், பிரசாரம், கல்வி, மன ஊக்கம் இவைகளைக்கொண்டு அறவே ஒழிக்க உடனே முயலவேண்டும்.

60. மற்றும், பிறநாட்டாருடன் நாம் அதிகப் பழக்கமும் சேர்க்கையும் வைத்துக்கொள்ளாததாலும், அந்நாடுகள் மேன்மையடைந்த முறைகளை நாம் சரிவா கவனிக்காததாலும், மேனாட்டாருடைய நற்பழக்கங்களைக்கொள்ளாமல் அவர்களுடைய தீயபழக்கங்களை மட்டிலும் அநுஷ்டிக்கலானோம். இது நம் குற்றமே. மேனாட்டினருடைய தொழிலபிவிருத்திக்கான தொழில் முறைகள், வியாபார தந்திரங்கள், அறிவு, திட்டங்கள், சட்டங்கள், தொழிற்சாலைகளின் அமைப்பு, கண்காணிப்பு, இயந்திரங்களின் கோர்வை, கருவிகளின் சிறப்பு, அவர்களின் ஒற்றுமை, பண்டங்களை விற்கச்செய்யும் பிரசாரம் இவைகளை நாம் கற்றறிந்தோமில்லை. நவீன வியாபார முறைகளும், தொழில் முறைகளும், அரசாங்க தந்திரங்களும் மிக்க சிக்கலான விஷயங்கள்; அவைகளை நாம் சரிவர கவனிக்கவில்லை. நம் நாடு ஸ்வாதந்திரியமற்று கீழ் நிலைமையிலிருப்பதால், தொழிலபிவிருத்தியில் ஈடுபடும் பெரியோர்கள் சரியான சட்டதிட்டங்களை ஏற்படுத்தவோ, பொருளாதார நிலையை உயர்த்தவோ, நவீன முறையில் வியாபாரம், தொழில் இயந்திரம் இவைகளை ஏற்படுத்தவோ முடியாமலிருக்கிறது.

61. முன்னத்தியாயங்களில் கூறியபடி விவசாயந்தான் நம் நாட்டில் ஒரு பெரும் தொழிலாக இருந்து வருகிறது. பலவகைப்பட்ட கைத்தொழில்களும், இயந்திரத் தொழில்களும், ஆலைத் தொழில்களும் விருத்தியாக இடமில்லாமற் போய்விட்டது.

62. விவசாயம், அதைச்சார்ந்த கால்நடைப் பண்ணைகள், கோழிப் பண்ணைகள், தேனீப் பண்ணைகள், பால்பண்ணைகள் இவைகளில் உண்டாகும் வருவாயைக் காட்டிலும், கைத்தொழில், ஆலைத்தொழில் இவைகளில் ஆயிரமடங்கு அதிக வருமானம் சுளுவாய்க் கிடைக்கக் கூடியதாக இருக்கிறது. இது யாவரும் மறுக்க முடி-

யாத நிரந்தர உண்மை. இப்படியிருக்க, வருவாயைத் தொழில் முறையால் அதிகப்படுத்த ஜனங்களும், அரசாங்கமும் ஏன் தக்க நடவடிக்கைகள் எடுத்துக்கொள்வதில்லை? ஜனங்களின் அசிரத்தையும், ஊக்கமின்மையுமே இதற்குக் காரணம். ஆகவே, மக்களிடத்தில் வருமானத்தை அதிகப் படுத்தும் அவாவை உண்டாக்கவும், அவர்களின் ஆர்வத்தைக் கிளரவும், அவர்களின் பிற்போக்கான மனப்பான்மையை மாற்றி முற்போக்கு நோக்கங்களை அவர்களுக்குக் காண்பிக்கவும், உறுதிகொண்டுதான் அ. இ. உ. சங்கம் ஏற்படுத்தப்பட்டுள்ளது. ஆதலால் இச் சங்கத்துடன் ஒத்துழைத்து நாட்டு க்ஷேமத்திற்கு யாவரும் பணியாற்றமுன்வர வேண்டும். இதுவே இச்சங்கத்தின் வேண்டுகோளாகும்.

63. விவசாயத்தையும் அதைச்சார்ந்த தொழில்களையும் அறவே ஒழிக்க வேண்டும், இயந்திரத் தொழில்களை மட்டும் ஆதரிக்க வேண்டுமென்பது அ. இ. உ. சங்கத்தின் கொள்கையல்ல. ஆனால், மேன்மைபெற்ற நாடுகளில் விவசாயமும், தொழிலும் என்ன விகிதத்தில் மக்களால் செய்யப்படுகின்றனவோ அதையொட்டியும், நம் நாட்டநுபவத்தை யொட்டியும், விவசாயத்தில் ஓரளவு ஜனத்தொகையை மட்டிலும் இருத்திக்கொண்டு, எஞ்சிய பெரும்பாலோரை இயந்திரத் தொழில்களிலும், கைத்தொழில்களிலும் ஈடுபடும்படிச் செய்யவேண்டும். தக்க தொழில்கள் இப்போது இல்லாததால் அநேகர் விவசாயத்தை நாடவேண்டியிருக்கிறது. இவ்வாறு நம் நாட்டில் 3-ல் 2 பங்கு மக்கள் விவசாயத்தில் வறுமை வாழ்க்கையை நடத்தவேண்டியிருக்கிறது. தொழில்களில் ஈடுபடுபவர்கள் 10-ல் 1 பங்குகூட இருக்காது. அதுவும் சிறு தொழில்களிலும் கைத்தொழில்களிலும் ஈடுபடுபவர்கள் பலர். இயந்திரத் தொழிலிலிருப்பவர் மிகவும் அற்பமானவர்களே. ஆனால் மேநாடுகளில் இயந்திரத் தொழில்களில் 100-க்கு 50 பேருக்கு மேற்பட்டே வேலை செய்கின்றனர்; 100-க்கு 7 பேருக்கு மேற்படாமல்தான் விவசாயத்திலிருக்கின்றனர்

அந்நாடுகளில் நாளடைவில் விவசாயத்தைக் கொள்ளும் ஜனத்தொகையைக் குறைத்துக் கொண்டே வந்து இயந்திர உற்பத்தித் தொழில்களில் அதிக மக்களை ஈடுபடும்படிச் செய்திருக்கின்றனர். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் ஒரு நூற்றுண்டிற்குமுன் இப்போது இந்தியாவிலுள்ளதுபோன்று நூற்றுக்கு 67 பேர் உழவுத் தொழிலே நம்பியிருந்தனர். அப்போது அமெரிக்கா ஒரு நாகரீக நாடாகக் கருதப்படவில்லை. ஆனல் இந்த நூற்றுண்டில்விவசாயத்தில் நூற்றுக்கு 22-பேருக்கும் குறைவாகவே ஈடுபடும்படிச் செய்து, தொழிலில் பெரும்பாலோர் வேலை செய்யும்படிச் செய்ததால், அமெரிக்கா மிகச் செழுமை பெற்று உலகில் மிக்க உந்நத நிலைமையை யடைந்திருக்கிறது. அதுபோல நாமும், பொருளாதார நிலையில் உயர்வையடைய அமெரிக்கா ஐக்யநாடுகள் போன்று, தொழில்களை அதிகமாகப் பெருக்கி அவைகளில் அதிகம் பேர்களை ஈடுபடும்படிச் செய்யவேண்டும். விவசாயத்தில் காலக்கிரமத்தில் நூற்றுக்கு 30-பேருக்கும் குறைவாகவே இருக்கும்படிச் செய்யவேண்டும். அதிகப்படியான ஜனத்தொகையைத் தொழிலில் இருத்தி, அதனல் நாட்டு வருமானத்தை அதிகரிப்பித்து, தேச முன்னேற்றத்தை அதிகப்படுத்தி, தேசத்தின் நன்னலத்திற்கு வழி தேடவேண்டும். தக்க இயந்திர முறையில் விவசாயத்தைச் செய்தால் இப்போது கிடைக்கும் வருமானத்தைக் காட்டிலும் அதிகமாகக் கிடைக்கும்படிச் செய்யலாம்.

64. நமது அரசாங்கம் மட்டிலும் பெரிய மனது வைத்தால் 5-வருட கெடுவிற்குள் நம் நாட்டை உலகிற் சிறந்த நாடாகச் செய்ய முடியும். இங்கிலாந்தில் கப்பல் கட்டும் தொழில்களுக்கும், சர்க்கரைத் தொழில்களுக்கும் வேண்டிய சட்ட திட்டங்களை ஏற்படுத்தி, ஏராளமான பொருளுதவி செய்து, சலுகைகள் காட்டி, காப்புகள் கொடுத்து, வியாபாரம் போக்குவரத்து முதலிய வசதிகளை

ஏற்படுத்தி தொழிலபிவிருத்தி செய்திருக்கிறார்கள். நம் நாட்டில் இத்தகைய உதவி ஏன் கொடுக்கப்படுவதில்லை? உலகப்போக்கை நன்கு கவனித்தால், அமெரிக்கா, இங்கிலாந்து, முதலிய நாடுகள் தம்முதவியைத் தாமே எதிர்பார்க்கின்றன; பொருளாதார சந்துஷ்டி, பிற நாடுகளை எதிர் பாராதிருத்தல், முதலியவைகள் அதிகமாக அனுஷ்டிப்பதாகத் தெரியவரும். நம் நாட்டிலுள்ள பிரமுகர்களும், தலைவர்களும், அரசாங்கமும் தேச முன்னேற்றத்திற்குப் பாடுபடுபவர்களாகவும், பொருளாதார சுயேச்சையை யடையும்படிச் செய்பவர்களாகவும் ஆகவேண்டும்.

65. முன்னேக்க சீர்திருத்தங்களில் முதற்படி கல்வியைச் சரிவரப் பரவச்செய்வதே. மக்கள் யாவரும் கண்ணியமான வாழ்க்கைக்குத் தக்க ஆதாரக் கல்வி பயிலவேண்டும். இது அரசாங்கத்தின் பொறுப்பாகும். மற்றும் தொழிற் கல்வி, வியாபாரக்கல்வி, பொருளாதாரக் கல்வி, முதலியவைகளின் சாராம்சங்களையாவது யாவரும் கற்றறியச் செய்ய வேண்டும்.

> “ஒவ்வொருவனும் அடிமை வாழ்க்கையை விடுத்து மரியாதையாகவும், சுகமாகவும் மனிதன்போல் வாழவேண்டுமானல், அவர்கள் தத்தமது வருமானத்தை அதிகப்படுத்த வேண்டும். அப்படி வருவாயை வளர்த்த, கர்நாடக மனப்போக்கையும் தீய வழக்கங்களையும் ஒதுக்கி, பொருள் விரயத்திற்குக் காரணமான ஆசாரங்களை விடுத்து நவீன முறையில் பொருள் உற்பத்திக்கான திட்டங்கள், முறைகள், செயல்கள், தந்திரங்கள் நுட்பங்கள் முதலியவைகளைக் கற்று அவைகளை வாழ்க்கை முறையில் கொண்டு வரவேண்டும்”

என்னுமரிய மந்திரத்தை ஜபித்து ஒவ்வொருவனும் அதைப் பின்பற்ற முயலவேண்டும். இம்மனப் பான்மையை ஜனங்களிடம் பரவச்செய்யத் தீவிரமான பிரசாரம் செய்ய

வேண்டியது முக்கியம். நம் நாட்டில் சீராக்கப்பட்ட பொருள்களும், வழக்கங்களும், திட்டங்களும் ஒன்றுமே யில்லை. பலகாலம் வரையில் இப்பெருங்கண்டத்தில் சீராக் கப்பட்ட நிறுத்தலளவைகள், நீட்டலளவைகள், முகத்த லளவைகள் இவைகள் கூடக்கிடையா. எவ்வளவு ஊர் களுண்டோ அவ்வளவு வெவ்வேறான அளவுகளைக் கொண்டு வாணிபம் செய்யப்படுகிறது. தக்க சட்டதிட் டங்களை ஏற்படுத்தி, பொருளாதார முறைகளை ஒழுங்கு படுத்தி, வாழ்க்கையிலுள்ள எல்லா அம்சங்களையும் சீர்ப் படுத்தி, இடங்களுக்கும் சமயங்களுக்கும் தக்கவாறு பல தொழில்களை ஆரம்பித்து வளர்த்து, பலபேருக்கு ஜீவனோபா யத்திற்கு வழிதேடினால் எல்லோரும் நாகரிக நல்வாழ்க்கை நாடலாம்; உடல்நலம், உயிர்நலம், உடை, உணவு, உறை விடம், உயரிய வாழ்வு, உந்நத நோக்கம், உரிய செல்வம் எல்லாம் உண்டாக இடமுண்டு.

66. விஞ்ஞான அறிவின் விசாலிப்பினாலும், நூதன இயந்திரங்களையும் இரசாயனங்களையும் கண்டுபிடிப்பதனா லும், நடக்கும் போரின்பயனாகவும், உலக வாழ்க்கையில் பல அற்புதமான மாறுதல்கள் ஏற்படலாம் என்று எதிர் பார்க்க இடமுண்டு. ஆகையால் அத்தகைய மாறுதல் களுக்கு நாமும் பிறநாட்டாரைப்போன்று நம்மை இலாயக் குள்ளவர்களாகச் செய்துகொள்ள வேண்டாமா? சமூகங் களைச் சீர்திருத்தி, தக்க திட்டங்களைப்போட்டு, இன்னின் னார் இன்னின்ன வகையில் செயல்கள் செய்ய வேண் டுமென ஒழுங்குபடுத்தி, அதன்படி ஒழுகிவந்தால், நாட்டி லுள்ள ஒவ்வொரு குடும்பமும், குடும்பத்திலுள்ள ஒவ் வொரு நபரும் சுகவாழ்வுபெற முடியும். இம்மாதிரி ஒழுங்கு ஏற்படத் தீவிர முயற்சி, தன்னடக்கம், ஒற்றுமை, ஆர்வம், ஊக்கம் இவைகள் மிகமிகத் தேவையானவை. இத்தகைய சுக வாழ்விற்குத்தான் உலகம் முயற்சிக்கிறது. "பொருளில்லார்க் கிவ்வுலகமில்லை" என்பது யாவரும்

அறிந்த உண்மை. ஆனால் இச்சிறந்த உண்மை, உயரிய இலக்ஷியம், எட்டாத உயரத்தில் இருப்பதுபோல் நமக்குக் காண்கிறது. பிறநாடுகள் இவ்விலட்சியத்தை ஒருவாறு அடைந்திருக்கின்றன எனலாம். இந்த இலட்சியத்தை நாம் கனவில்தான் கண்டு இன்புற்றுக்கொண்டிருக்கிறோம். ஆனால், நனவில் நம் முயற்சியால்தான் ஏற்படும் என்னும் நம்பிக்கையை மட்டிலும் நாம் விடக்கூடாது. காலம் எப்பொழுதும் கடுமையாக இருக்காது. நற்காலம் கூடிய சீக்கிரம் நமக்கு உதயமாகும். அப்பொழுது தக்க சட்டதிட்டங்களுக்கும், தொழில் முறைகளுக்கும் உட்பட்டு சீரிய பழக்கவழக்கங்களைக் கைக்கொண்டு, நாகரிக மேம்பாடடைந்து, மக்கள் யாவரும் சோம்பலின்றி எண்ணிய கருமம் கைகூடும்வரை உழைப்பவர்களாக ஆவோம் என்பது திண்ணம்.

இங்கிலாந்தின் முற்போக்குச் சீர்திருத்தங்களைப்பற்றி ஸ்ரீ ரிட்சி கால்டர் என்னும் அறிஞர் "குடியாட்சி முறை (Democratic order)" என்னும் தம் நூலில்,

> "சமூக சீர்திருத்தத்தின் முதற்படி தக்க உணவை எல்லோரும் அடையும்படிச் செய்வதே. சுகாதார வாழ்க்கைக்குத்தக்க, போதுமான உணவை எல்லோரும் அடையும்படி உத்திரவாதம் ஏற்படவேண்டும். சுத்த குடிநீரை எவ்விதம் திட்டம் செய்கிறோமோ, அவ்விதமே தக்க உணவை யடைய "உணவுச்சேவைக் கழகங்கள்" ஏற்படவேண்டும்........................ ஒவ்வொருவரும் நல்ல தேகதிடத்துடன் வாழ்க்கையை நடத்தத் தக்க ஆகாரம் உட்கொள்ள வேண்டும். இது சமூகத்தின் பொறுப்பாகும்.................."

என்று எழுதியுள்ளார். இதினின்றும், நாட்டுமக்கள் ஒவ்வொருவருக்கும் தக்க உணவு அளிக்கப்பட்டால்தான் தேசக்ஷேமம் ஏற்படும் என்று கூறுவது மிகையாகாது.

## 10. இயக்கத்தின் வெற்றிக்குச் சில திட்டங்கள்

67. இந்தியாவின் உற்பத்தித்திறன், பொருளாதார அபிவிருத்தி, சமூக இலட்சியம், வாழ்வுநிலை இவையாவும் அரசாங்கத்தாரின் உதவி அல்லது அசிரத்தை இவற்றால் பாதிக்கக்கூடியதாக இருக்கிறதென்று முன்னத்தியாயங்களில் காண்பிக்கப்பட்டது. எனினும், தேசபக்தியுள்ள ஒவ்வொருவரும், தேச க்ஷேமத்தை விரும்பும் ஒவ்வொருவரும், உற்பத்தித்தொழில்களால் உயர்வை எதிர்பார்க்கும் ஒவ்வொருவரும், தத்தமது செயல் திறமையைப் பூரணமாக தேசப்பணியில் ஈடுபடச் செய்யவேண்டும்.

68. தற்கால சந்தர்ப்பங்களையொட்டி நாம் எம்முறையில் சீர்திருத்தங்களைக் கொள்ளவேண்டுமென இங்கு ஒருவாறு திட்டம் ஏற்படுத்தலாம். அவை,

(i) இதுகாறும் அரசாங்கத்தாரால் கொடுக்கப்பட்டிருக்கும் உதவிகள் போதாதவை. ஆதலால் போர் முடிவடைந்து அதற்குப்பின் தொழிலபிவிருத்தியை எவ்வாறு துவக்க வேண்டுமென, பொதுஜன பிரமுகர்களாலும், வியாபாரக் கழகங்களாலும், தொழிற் கழகங்களாலும், பொதுஸ்தாபன அங்கத்தினர்களாலும் "போருக்குப்பின் சீர்திருத்தக் கமிட்டி" என்று உடனே ஒரு கமிட்டி ஏற்பாடாக வேண்டும்.

(ii) இந்தியாதேசம் பூராவும் நன்மையையடையும் பொருட்டு, 1000 கோடி ரூபாய் மூலதனத்திற்குறையாமல் ஐந்து வருஷத்திட்டங்களுக்குட்பட்ட பெரும் ஆலைத்தொழில்கள் உடனே ஆரம்பிக்கப்படவேண்டும்.

(iii) இப்போது இருப்பதைக் காட்டிலும், அதிக மான பணஉதவி, சலுகைகள், ஆதரவு, காப்பு வரி, இதரவசதிகள் இவைகள் அரசாங்கத்தாரிடம் ஏற்படும்படி ஏற்பாடு செய்தால் 5 அல்லது 6 ஆண்டுகளில் உற்பத்தித்திறனை இருமடங்காக்கி விடலாம்.

இவ்வாறு தொழிலபிவிருத்திக்கான திட்டங்களை வகுத்தால் விவசாய உற்பத்தியும் தன்னால் அபிவிருத்தி யடையும் என்பதில் சந்தேகமில்லை.

(iv) உருக்குத்தொழில், தற்சலனிகள், (மோட்டார்கள்), ஆகாய விமானங்களைக் கட்டுதல், கப்பற்கட்டுதல், இரசாயனப் பொருள்கள் உற்பத்தி, சாயங்கள் மற்ற இயந்திர சாமான்கள், கருவிகள், இவைகளைச் செய்ய உடனே ஏற்பாடுகள் ஆரம்பித்து எப்படியும் போருக்குப்பின் செயல் முறையில் வந்துவிடவேண்டும். இந்த ஏழு பெருந்தொழில்களைச் செய்ய 10 அல்லது 12 தொழிற்சாலைகள் நம் நாட்டில் ஆங்காங்கு ஸ்தாபிப்பதை நாம் வரவேற்க வேண்டும். ஒவ்வொரு மாகாணமும் ஒன்றிரண்டு பெருந்தொழிலை ஏற்றுக்கொண்டு செய்ய முன்வர வேண்டும். இவ்விதம் செய்தால் 3 அல்லது 4 வருஷத்தில் மற்ற தொழில்களுக்கு ஆதாரமான பெருந்தொழில்கள் யாவும் எற்பட்டு விட்டதாக ஆகும். இவைகளைக் கொண்டு மற்ற சார்புத்தொழில்களையும் கைத்தொழில்களையும் ஏற்படுத்தச் சாதகமாக ஆகும்.

(v) முதன் முதலில் மற்ற தொழில்களுக்கும் தேவையான இரும்பு இயந்திரங்களும்

கருவிகளும் செய்யப்பட வேண்டும். இயந்திர சகாப்தமான இக்காலத்தில் இளைஞர்களில் பெரும்பாலோர் கருவிகளைச் செய்வதையும், கருவிகளைக்கொண்டு செப்பனிடுதலையும் நன்கு பழகவேண்டும். மேனாடுகளிலுள்ளது போன்று செல்வாக்குள்ள இளைஞர்கள் தாமே கருவிகளை வாங்கி தத்தமது இல்லத்திலேயே இயந்திரங்களைக் கோர்த்துப் பழக வேண்டும். இவ்விதம் செய்வதால் தொழிற் பயிற்சிக்குப் பயிற்சி, விளையாட்டிற்கு விளையாட்டு, இன்பத்திற்கு இன்பம் இவை முதலிய பயன்கள் ஏற்படும்.

(vi) தேசக்காப்புத் தொழில்கள்:— நம் நாட்டின் பாதுகாப்பிற்குத் தேவையான எல்லாபோர்த் தளவாடங்களையும் பிற நாடுகளிலிருந்து எதிர்பார்க்க வேண்டிய அவசியமில்லை. எதிர்பார்க்கவும் கூடாது. உலகச் சமாதானக் குறைவின்போது நம்மை நாமே பாதுகாத்துக் கொள்ள நம்மை பலப்படுத்திக் கொள்ள வேண்டும். ஆகையால் உடனே ஆகாயக் கப்பல்கள், விமானங்கள், மோட்டார் டிரக்குகள், டாங்குகள், உருக்கு இயந்திரக் கருவிகள், கப்பல்கள், குண்டுகள், பாம்கள், ரவைகள், தோட்டாக்கள், துப்பாக்கிகள், பீரங்கிகள், ஈட்டிகள், துப்பாக்கி வண்டிகள் முதலியவைகளைச் செய்யப் பல தொழிற்சாலைகளை ஏற்படுத்த வேண்டும். இவ்விதம் செய்வதால் நம் தற்காப்புக்கு நாமே பலப்படுத்திக் கொள்வதன்றி, வெளி நாடுகளில் விலைக்கு வாங்குவதில் வெளிப்போகும் கோடிக்கணக்கான ரூபாயும் நம் நாட்டிலேயே தங்கும்.

போர் ஆரம்பித்த பிறகு கானடா தேசமும், ஆஸ்திரேலியா நாடும், போர்த் தளவாடங்களைச் செய்யப் பல தொழிற்சாலைகளை ஏற்படுத்தி ஏராளமான பண்டங்களைச் செய்யக் கற்றுக் கொண்டிருக்கின்றன. இம்மாதிரி சந்தர்ப்பம் நம் நாட்டிற்கு ஏற்படவில்லையா? ஏற்பட்ட சந்தர்ப்பங்களை ஏன் கைசோரவிட்டுக்கொண்டிருக்கிறோம்? அடிமை வாழ்க்கையே காரணம்.

பின் 23-வது பாராவில் ஜில்லாக்களிலும் கிராமங்களிலும் மேற்கொள்ளக் கூடிய சார்புத் தொழில்களைப்பற்றிக் கூறப்பட்டது. கிராமங்களில் நபர் ஒன்றுக்குச் சராசரி வருட வருமானம் ரூ. 30 ஆகும். இதில் ரூ. 6-க்கும் குறைவாகத்தான் தொழிலிலிருந்து கிடைக்கிறது. மேன்மையடைந்த மேனாடுகளில் நபர் வருமானம் ரூ. 300-க்குக் குறையாமல் இருக்கிறது. அமெரிக்கா நாடுகளில் ரூ 600–800 வரையில் உண்டு. இதினின்று நம் நாடு எவ்வளவு வறுமை நிலையில் உழன்று கொண்டிருக்கிறதென வெள்ளிடை மலைபோல் விளங்கும்.

தொழிற்சாதனங்கள் :— புள்ளி விவரங்களைத் தயாரித்தல், பாங்குகளை ஏற்படுத்தல், பிற நாட்டுப் போட்டிகளிலிருந்து தப்ப, தக்க காப்புவரிகளை விதித்தல், தொழிற் பயிற்சி, வியாபாரக்கல்வி யதிகமாய்ப் பரவும்படி செய்தல் இவைகள் தொழிற்சாதனங்களில் முக்கியமானவை. இதற்கு உடனே தக்க திட்டங்களை ஏற்படுத்த வேண்டும்.

(ix) **போருக்குப்பிந்திய சீர்திருத்தங்கள்:–** அரசாங்க வியாபார இலாகாத் திட்டங்கள் போருக்குப் பின் தொழிலபிவிருத்தியை அதிகமாகச் செய்யச் சாதனங்களாக இல்லை. கமிட்டிகளை ஏற்படுத்துவதிலும், காகிதங்களில் திட்டங்கள் வகுப்பதிலும், பிரசங்கங்களிலும் தவிர, செய்கையில் மேற்கொண்டு செல்லுவதாகத் தோன்றவில்லை. ஆகையால் தொழிலபிவிருத்தியைச் செயல் முறையில் நடத்தத்தக்க ஏற்பாடுகள் இப்பொழுதே செய்தாக வேண்டும். அரசாங்கத்திட்ட அளவுடன் நின்றுவிட்டால் அது நம் நாட்டை நாம் எதிர்பார்க்கும் உந்நத நிலைக்குக் கொண்டு செல்லாது. மக்கள் தாமாகப் பாடுபட்டால்தான் ஏதாவது செய்யமுடியும்.

69. தொழிலபிவிருத்தி விஷயங்களில் நாம் இதுகாறும் மிக்க அசிரத்தையையும் அலக்ஷியத்தையும் காட்டி வந்திருக்கிறோம். இதனால் பல இன்னல்கள் ஏற்பட்டுள்ளன. இப்போது நடக்கும் சைனியப் போருக்குப்பின் "வாழ்க்கைப்போர்" துவங்கும். நாம் தொழிலபிவிருத்தி விஷயங்களிலும் பொருளாதார வளர்ச்சியிலும் ஊக்கமின்றி இருந்து விட்டால் பிற நாடுகளைப்போன்று வளம் பெற வழியின்றி, கீழ் நிலையிலேயே இருக்க நேரிடும். சோம்பேறி வாழ்க்கையை விடாமல் நாம் நடத்திக்கொண்டே வந்தால் நம் வறுமை தழைத்து எப்பொழுதும் வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்களுக்குங்கூட இதர நாடுகளை எதிர்பார்க்கும் நிலை வந்துவிடும். ஆகையால் ஊக்கமுடையவர் ஆக்கத்தைக்கொண்டு பல இயந்திர நிலையங்களையும் தொழிற்சாலைகளையும் நிறுவி, நம் நாட்டுச் செல்வத்தை வளர்த்த உடனே முன்னணிக்கு வரவேண்டும். இதனால் மக்கட் சேவை, சமூகச்சேவை, நாட்டுச்சேவை

இவையாவும் சரியான முறையில் செய்யப்பட்டதாக ஆகும். நம் நாடும் செல்வப் பெருக்கால் புத்துயிர்பெற்று, வறுமை நீங்கி, யாவர்க்கும் வாழ்வுநிலை உயர்ந்து, யாவரும் தம் தேவைக்குத்தக்க எல்லா வசதிகளையும் பெறமுடியும். நம் நாட்டுத் தேவைகளையெல்லாம் நாம் குறைந்த செலவில் செய்துகொள்ளவும் முடியும், தவிர நாட்டிற்குத் தக்க தற்காப்பும் ஏற்பட்டுவிடும்.

70. "விஞ்ஞான வளர்ச்சியும், தொழிலபிவிருத்தியும், இனி ஏற்படப்போகும் சமூக வாழ்க்கைக்கு அடிப்படையானவை. இவைகளால் வறுமையி விருந்து நாடு செழுமைக்கு உயர வழியுண்டு. உலக மாந்தர்க்கு இனி ஏற்படும் வாழ்க்கைநிலை தொழிற்திட்டங்களை உயரிய முறையில் நடத்து வதால் தான் ஏற்படவேண்டும்" என்று ஸ்ரீ ஜான் டி. மாதன் என்னும் அறிஞர் நியூயார்க்கு சர்வ கலாசாலையில் செய்த ஒரு சொற்பொழிவில் கூறியுள்ளார். இதை நாம் பொன்னேபோல் போற்றுவது தகும்.

71. அரசாங்க வசதி ஏற்பட்டாலும் சரி; ஏற்படா விட்டாலும் சரி; ஏற்படத் தாமதமானாலும் சரி; நாம் நம்மைக் கொண்டே தொழிலபிவிருத்திக்குத் தீவிரமாக முயற்சிக்க வேண்டும். பொருளாதாரக் கீழ் நிலையிலிருந்து மேலுயர நாம் பார்த்தவரை வேறு மார்க்கம் கிடையாது. தொழிலபிவிருத்திபோன்று குறைந்த காலவரையில் நாட்டுக்குச் செழிப்பையளிக்கும் சுளுவான மார்க்கமும் வேறு இருப்பதாக நாம் பார்த்த அளவில் கிடையாது.

நாட்டிலுள்ள பிரபல ஸ்தானங்களை வகிக்கும் பெரு மக்கள், இப்போதே தக்க திட்டங்களை ஏற்படுத்துவது, பல சாதனங்களை ஒழுங்குபடுத்துவது, நன் முறைகளை வகுப்பது, மக்களின்மனதில் ஆர்வத்தையும் ஊக்கத்தையும்

ஊட்டுவது, இவைகளை உடனே செயல் முறையில் செய்யவேண்டும். ஒவ்வொருவரும் தம் முழுத்திறனையும், அறிவையும் தேச நலத்திற்காக அர்ப்பணம் செய்யவேண்டும். நடந்துவரும் போரிலிருந்து அறியக்கூடிய அறிவையும் அநுபவத்தையும் பயன் படுத்தாமல் கிடைத்த சந்தர்ப்பத்தை வீணாக்கிவிட்டால் இனி இத்தகைய சந்தர்ப்பம் எப்பொழுது கிட்டுமோ யாமறியோம். இவ்வரிய சந்தர்ப்பத்தைத் தக்கபடி பயன்படுத்தாமல், பழைய தூக்கத்தை நாம் தொடர்ந்து நடத்திக்கொண்டே வந்தால் நாட்டுச் செழுமை குன்றி, பிழைக்கும் வழியின்றி, மக்கள் வறுமையில் அல்லலுற்று என்றும் அடிமைகளாய் வருந்த நேரிடும்.



## I. இயந்திரத் தொழில்களின் தொகுதிகளும், பிரிவினைகளும்.

i. *இயந்திர சம்பந்தப்பட்ட தொழில்கள்:—*

1. இரும்பும், உருக்கும், வார்ப்பு, கம்பி, கட்டிட வேலைக்குத் தகுதியானவை.
2. மற்ற ஆலைகளுக்குத் தேவையான இயந்திரங்கள்.
3. விவசாய இயந்திரக் கருவிகள்.
4. இருப்புப்பாதைகள், என்ஜின்கள், வண்டிகள், வாகன்கள்.
5. இயந்திரவிசை உண்டாக்கும் என்ஜின்கள், நீராவி, எண்ணெ, பெட்ரோல் என் ஜின்கள்.
6. யுத்த தளவாடங்கள், துப்பாக்கிகள், பீரங்கிகள் டாங்கிகள்.
7. மோடார் வண்டிகள்; ஆகாய விமானங்கள்.
8. மின்சார இயந்திரங்கள், மின்சார மோட்டார்கள், கருவிகள், மின்சார அழுத்த மாற்றிகள்.

ii *இரசாயனத் தொழில்கள்:—*

1. பிரதம இரசானங்கள்; சாயங்கள்; தோல் பதனிடும் இரசாயனங்கள்; மருந்து, அரக்கு, வாசனை எண்ணைகள்.
2. எருக்கள்; உரம்.
3. காகிதம், அட்டை, மை, அச்சுக்கள்.
4. சிமெண்ட், கண்ணாடி, பீங்கான்.
5. செயற்கைப் பட்டு.

6. தோல், ரப்பர் சாமான்கள்.
7. சர்க்கரை, சாராயம் வடித்தல்.
8. தீப்பெட்டி.

iii. மற்ற தொழில்கள்:—

1. பருத்தி, கம்பளி, பட்டு, சணல் நார் ஆலைகள், நெசவு ஆலைகள்.
2. கப்பல், படகு கட்டுதல்.
3. சுரங்கவேலை, கனிப்பொருள் எடுத்தல், அலுமினியம், மங்கனீஸ், இரும்பு, செப்பு, ஈயம், குரோம், நிலக்கரி, பெட்ரோல், காக்காப் பொன் இவைகளை எடுத்தல், பிரித்தல்.
4. இரும்பல்லாத மற்ற உலோகப்பொருள்கள்.
5. மரம், மரச்சாமான்கள்.
6. விஞ்ஞானக்கருவிகள், ரேடியோ சாமான்கள், தந்தி, டெலிபோன், கடிகாரம்.
7. ஆஹாரம், குடிவகையரு, புகையிலை, தேயிலை காபி முதலிய இலாகிரி வஸ்துக்கள்.
8. போக்கு வரத்துச் சாதனங்கள், சாப்பாடு விடுதி, தங்கும்விடுதி, பாங்குகள் முதலியன.

## II. சில சார்புத்தொழில்களின் தொகுதிகளும் பிரிவினையும்.

[இந்தப் பகுதியில் கண்டிருக்கும் தொழில்கள் கிராமவாசிகளுக்கும் ஏனையோர்களுக்கும் மிகவும் அவசியமானவை]

i. உணவு, அதைச்சார்ந்த தொழில்கள்:—

1. விவசாயக்கருவிகள்.
2. ரொட்டி, பிஸ்கோத்து, தின்பண்டங்கள்.

3. தேனீ வளர்த்தல்.
4. பால்பண்ணை, பால், தயிர், மோர் வெண்ணை, நெய்.
5. மீன் பண்ணை.
6. பழங்கள், காய்கறிகள்.
7. பழங்களைப் பக்குவப்படுத்தல், குளிர்ந்த பானங்கள், ஊறுகாய்கள்.
8. உணவுத்தொழில்கள், மால்ட்(மாவு)செய்தல்
9. காய்கறிப் பழத்தோட்டங்கள்.
10. வெல்லம், கருப்பட்டி செய்தல்.
11. கள், சாராயம் இலாகிரி வஸ்துக்கள்.
12. ஆகார விடுதி, தங்குமிடம்.
13. கால்நடைப் பண்ணை, பன்றிப் பண்ணை.
14. தீப்பெட்டி.
15. எண்ணெய் பிழிதல்.
16. நெல் குத்துதல்.
17. கோழி வளர்த்தல், முட்டை விற்றல்.
18. எண்ணெய்ச் சரக்குகள், பல சரக்குகள்.
19. வற்றல் தயாரித்தல்.
20. மாவு அறைத்தல்.
21. சோப்புகள், தைலங்கள், வாசனைத் திரவியங்கள், அத்தர்கள், ஊதுபத்திகள்.
22. உப்பு சேகரித்தல்.
23. புகையிலைப் பொருள்கள் தயாரித்தல்.

ii. உடையும், அதைச்சார்ந்த தொழில்களும்:—

1. "ரெடிமேட்" உடுப்புகள் தயாரித்தல், தையல் வேலை.
2. பூ வேலைகள்.
3. ஜமக்காளம், இரத்தின கம்பளங்கள் நெய்தல்.

4. பொத்தான்கள் தயாரித்தல்.
5. படுக்கைகள், தலையணைகள், திரைகள் தயாரித்தல்.
6. ரெட்டுத்துணி, பூட்ஸ்கள்.
7. சாயங்கள், வர்ணமிடுதல்.
8. எம்பிராய்டரி வேலைகள்.
9. பட்டு நூல் நூற்றல்.
10. தொப்பிகள் தயாரித்தல்.
11. சில்லரை உடுப்புகள் செய்தல்.
12. சரிகை வேலைகள்.
13. சலவைத் தொழில்.
14. தோல் சாமான்கள், பூட்ஸ், செருப்புகள், செய்தல்.
15. புருஷ்கள் செய்தல்.
16. உடுப்புகள், பாதரக்ஷைகள் ரிபேர் செய்தல்.
17. வளையல்கள், ஆபரணங்கள் செய்தல்.
18. நூல் நூற்றல்.
19. பட்டுப்புழு வளர்த்தல், பட்டு எடுத்தல்.
20. ரெட்டுகள் செய்தல்,
21. குடைகள் செய்தல்.
22. கம்பளி வேலைகள்.
23. நெசவு.

iii. கட்டிடத்தொழில்கள்:—

1. செங்கல்கள், ஓடுகள் செய்தல்.
2. சிமிட்டி தயாரித்தல்.
3. கயிறு, மூங்கில் வேலைகள், பிரம்பு, பாய் வேலைகள்.
4. களிமண் வேலைகள், பாத்திரங்கள் செய்தல் மண்பாண்டங்கள்.
5. கத்திரிக்கோல், கத்திகள், கரண்டிகள் செய்தல்.

6. மெழுகுவத்திகள்.
7. தட்டங்கள், பீங்கான் பொருள்கள் செய்தல்.
8. தச்சு வேலைகள், பெட்டி செய்தல்.
9. இதர வீட்டுப்பொருள்கள், வார்னிஷ்கள் பூச்சுகள்.
10. எனுமல் பாத்திரங்கள் செய்தல்.
11. மரச்சாமான்கள் தயாரித்தல்.
12. கண்ணாடிச் சாமான்கள் தயாரித்தல்.
13. வீடுகளை அமைத்தல்.
14. ஓட்டல்கள், கிளப்புகள், விடுதிகள் ஏற்படுத்தல், நடத்துதல்.
15. வீடு கட்டுதல்.
16. சுண்ணாம்பு சுடுதல்.
17. ஈயப்பாத்திரங்கள் செய்தல்.
18. உலோகப் பொருள்கள் செய்தல்
19. கல் சட்டிகள், பாத்திரங்கள் செய்தல்.
20. இரும்புப் பெட்டிகள் செய்தல்.
21. தகரச் சாமான்கள் செய்தல்.
22. அலுமினியப் பொருள்கள் செய்தல்.
23. மரக்கலங்கள் செய்தல்.

iv. கல்வி சம்பந்தமான தொழில்கள்:—

1. புஸ்தகங்களை பைண்டு செய்தல்.
2. ப்ளாக்குகள் தயாரித்தல்.
3. கார்பன் காகிதம் செய்தல்.
4. ரப்பர்களைச் செய்தல்.
5. உலோகங்களில் எழுத்துப் பொறித்தல்.
6. ஊற்றுப் பேனாக்கள் செய்தல்.
7. கோந்து தயாரித்தல்.
8. பலவகை மசிகள் செய்தல்.

9. ரப்பர் ஸ்டாம்புகள் செய்தல்.
10. வத்திகள்.
11. ஊசி வேலைக்கு வேண்டியன.
12. பத்திரிகைகள் அச்சடித்தல்.
13. நோட்டுப்புஸ்தகங்கள்,கார்டு,கவர்,செய்தல்
14. பென்சில்கள் செய்தல்.
15. பேனாக்கள், நிப்புகள் செய்தல்.
16. குண்டூசிகள், கிளிப்புகள், டாக்குகள் (tags) செய்தல்.
17. பென்சில் சீவும் கத்திகள் செய்தல்.
18. இதர அச்சுவேலைகள்.
19. ஆபீசு சம்பந்தப்பட்ட சகல கருவிகள் தயாரித்தல்.
20. சிலேட்டுகள், குச்சிகள்.
21, கத்தரிக்கோல்கள்.
22. டிராயிங் கருவிகள் செய்தல்.
23. டைப்ரைட்டர் ரிப்பன்கள் செய்தல்.
24. தேசப்படங்கள் தயாரித்தல்.

v. சுகாதாரம், விளையாட்டு, பொழுதுபோக்கு:—

1. விளையாட்டுக் கருவிகள்.
2. பொம்மைகள், (மரம், கல், கண்ணாடி, பீங்கான், மண், ரப்பர், செலுலாய்ட், தகரம்.)
3. வைத்தியக் கருவிகள்.
4. மருந்துகள் முதலியன.
5. சங்கீதக் கருவிகள்.
6. பார்க்குகள், விளையாடுமிடங்கள் அமைக்கக் கருவிகள்.
7. புகைப்படக் கருவிகள் முதலியன.
8. க்ஷவரக்கத்திகள், சோப்புகள், புருஷ்கள், கூந்தல் தைலங்கள், பவுடர்கள் முதலியன.

vi. *இதர தொழில்கள்:—*

1. வீட்டு வேலைகளுக்குப் பயன்படும் மண், கல், கண்ணாடி, உலோகப் பொருள்கள் செய்தல்.
2. சிறு இரும்பு, எஃகுப் பொருள்கள்செய்தல்
3. பொதுவான எல்லா ரிபேர் வேலைகளும் [செய்தல்.
4. சகல கருவிகளும் தயாரித்தல்.
5. காகிதம் செய்தல்.
6. அச்சுவேலைகள்.
7. ரஸ்தாக்கள், ஜலதாரை அமைத்தல்.
8. வைக்கோல், மயிர், சிறகு இவைகளால் பல பொருள்களைத் தயாரித்தல்.
9. கிராமத் தண்ணீர் வசதிகள்.
10. வண்டிகள் முதலியன அமைத்தல்.

## III. பற்பல நாடுகளில் தொழில்களில் இடப்பட்ட மூலதனங்களின் விபரங்கள்:

| நாடுகள் | மூலதனம் கோடிக் கணக்கில் | நபர் ஒன்றுக்கு உற்பத்தி விபரம் |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| இந்தியா .... .... | 750 | 15 |
| இங்கிலாந்து ஐக்யநாடு.... | 7067 | 481 |
| அமெரிக்கா ஐக்யநாடு ... | 23,300 | 307 |
| கானடா ... ... | 1235 | 286 |
| ஜப்பான் .... .... | 518 | 125 |
| ஜெர்மனி ... ... | 2773 | 478 |

## IV. பற்பல நாடுகளில் தொழில்களிலும், விவசாயத்திலும் ஈடுபடும் ஜனத்தொகை விபரம்:

| நாடுகள் | ஜனத்தொகையில் நூற்றுக்கு | |
|---|---|---|
| | விவசாயத்தில் | தொழில்களில் |
| இந்தியா .... .... | 67.2 | 10.2 |
| இங்கிலாந்து ... .... | 6.5 | 36.4 |
| அமெரிக்கா .... .... | 22.0 | 31.7 |
| கானடா .... .... | 31.2 | 24.9 |
| ஜெர்மன் .... ... | 28.9 | 40.4 |
| பிரான்சு .... .... | 38.3 | 33.3 |
| ஜப்பான் .... .... | 50.3 | 19.5 |

## V. நாட்டு வரவு:

| நாடுகள் | வருஷம் | மொத்த வரவு கோடிக் கணக்கில் | ஜனத்தொகையில் நபர் 1க்கு வருட வருமானம் |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| ஆங்கில இந்தியா .... | 1935–36 | 1600 | 56.3 |
| இங்கிலாந்து ... | 1936 | 5500 | 1201 |
| அமெரிக்கா .... | 1936 | 16000 | 1245 |
| கானடா .... ... | 1933 | 880 | 822 |
| ஜப்பான் .... .... | 1935 | 1657 | 239 |
| ஜெர்மனி .... .... | 1936 | 6613 | 985 |

## VI. ஜனத்தொகையும், தொழில் விபரங்களும்.

(குறிப்பு: நூற்றுக்கு இவ்வளவேன்பது.)

| நாடுகள் | | வருஷம் | விவசாயம், மீன்பிடித்தல், காட்டுத்தொழில் | இயந்திரத்தொழில் கைத்தொழில் சுரங்கவேலை | வியாபாரம், கப்பல் தொழில், இடமாற்றம் | பொதுச் சேவை சர்க்கார் வேலை | வீட்டு வேலைகள் | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| இங்கிலாந்து, வேல்ஸ் | .... | 1931 | 5.6 | 46.2 | 26.9 | 10.9 | 10.4 | 100 |
| ஸ்காட்லாந்து | .... | 1931 | 8.9 | 45.1 | 26.6 | 10.2 | 9.2 | 100 |
| அமெரிக்கா | ... | 1930 | 22.0 | 30.9 | 21.1 | 8.5 | 17.5 | 100 |
| கானடா | .... | 1931 | 31.2 | 26.6 | 23.4 | 9.1 | 9.7 | 100 |
| ஜெர்மனி | .... | 1933 | 28.9 | 40.4 | 18.4 | 8.4 | 3.9 | 100 |
| ஜப்பான் | .... | 1930 | 50.4 | 18.9 | 19.1 | 6.9 | 4.7 | 100 |
| இந்தியா | ... | 1931 | 67.2 | 10.2 | 6.7 | 1.6 | 13.3 | 100 |

## VII. படித்தவர்கள் விபரங்கள்:

(மோத்த ஜனத்தோகையில் 100-க்கு இன்னதேன்ற விபரம்)

| நாடுகள் | | வருஷம் | படித்தவர்கள் |
|---|---|---|---|
| அகில இந்தியா | ... | 1931 | 8 |
| ஆங்கில இந்தியா | ... | 1931 | 8.5 |
| இங்கிலாந்து | ... | 1921 | 76.1 |
| அமெரிக்கா | .... | 1920 | 74.5 |
| கானடா | .... | 1921 | 71.6 |
| ஜெர்மனி | .... | 1925 | 80 5 |
| பிரான்சு | .... | 1926 | 80.1 |
| ஜப்பான் | .... | 1925 | 71.7 |